# கோதையர் இடும் கோலங்கள்



R. ஸரஸ்வதி
L. விஜயலட்சுமி

# கோதையர் இடும் கோலங்கள்

தொகுத்தவர்கள்
**R. ஸரஸ்வதி**
**L. விஜயலட்சுமி**

**ஸ்ரீ விக்னேஷ் பதிப்பகம்**
பு.எண்.54, ப.எண்.29,
மோசஸ் தெரு, ஈஸ்வரன் நகர்,
பம்மல், சென்னை - 600 075.
கைபேசி: 94446 41761

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | **கோதையர் இடும் கோலங்கள்** |
| முதல் பதிப்பு | : | டிசம்பர், 2005 |
| இரண்டாம் பதிப்பு | : | டிசம்பர் 2015 |
| **விலை** | : | **ரூ.** 120-00 |
| மொத்தப் பக்கங்கள் | : | 123 |
| வெளியிட்டோர் | : | **ஸ்ரீவிக்னேஷ் பதிப்பகம்**<br>**பு.எண். 54, ப.எண். 29,**<br>**மோசஸ் தெரு, ஈஸ்வரன் நகர்,**<br>**பம்மல், சென்னை-600 075.**<br>**கைபேசி : 94446 41761** |
| உள்படங்கள் | : | ஓவியர் பரணி |
| ஒளி அச்சு மற்றும் வடிவமைப்பு | : | **சு. அசோக்குமார்**<br>Digital Designer<br>சென்னை - 600 080.<br>செல் : 94440 09048 |
| அச்சிட்டோர் | : | உதயம் ஆப்செட்,, சென்னை-2 |

# முன்னுரை

எனது அன்பிற்கும், போற்றுதலுக்கும் உரிய சகோதரி மதிஒளி சரஸ்வதி விஜயலக்ஷ்மி அவர்களின் கோலப் புத்தகத்திற்கு நான் அணிந்துரை எழுதுகிறேன். என்னால் அது இறைவன் எனக்களித்த பேறாகவே நான் கருதுகிறேன்.

வீடுகளில், கோவில்களில், பூஜையறையில், கல்யாண மண்டபங்களில் எந்தக் காரியத்தைத் துவங்க வேண்டுமானாலும் பிள்ளையார் சுழி போல - முதலில் தொடங்குவது கோலத்திலிருந்துதான்.

இந்தக் காலத்தில் நிறைய பிளாட்ஸ் - அடுக்கு மாடிக் கட்டிட வீடுகள் வந்து விட்டது. இதில் ஒன்று இரண்டு மூன்று வீடுகளுக்கும் சேர்ந்து ஒரே வாசலாக இருக்கும் போது - அதுவும் ஒரு பிளாட்டில் இந்து இன்னொன்றில் முஸ்லீம் அல்லது கிறிஸ்துவர் என வசிக்கும் போது - வாசலில் கோலமிடுவது என்பது சாத்தியமில்லாத விஷயமாகப் போய்விட்டது என்றே பல சகோதரிகள் சொல்கிறார்கள்.

நான் இவர்களுக்குச் சொல்வேன்; எம்மதத்தினராக இருந்தாலும் - அழகுணர்ச்சி என்பது அனைவருக்கும் பொது. சிறிய கோலமாக இருந்தாலும், திருத்தமாக, அழகாக வரைந்தால் - எல்லோரையும் ஒரு கணம் நம் வீட்டு வாசலில் நிறுத்தி வைக்கும்.

பெண்களால் வீட்டு வேலைகளை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, தனி அறையில் அமர்ந்து தியானம் செய்வதெல்லாம் முடியாத காரியம். ஆனால் வாசலிலோ, பூஜை அலமாரியின் முன்போ நாம் கோலமிடும் போது, கண், கரம், மூளை மட்டுமின்றி மனமும் லயித்தால் - தியானம் செய்தபின் நமக்குக் கிடைக்கக்கூடிய புத்துணர்ச்சியும், மனத்தெளிவு கிடைக்கும்.

புள்ளிக் கோலம் கணித அறிவை மட்டுமின்றி, வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களிலிருந்து மீண்டு வரும் புத்தி கூர்மையையும் கொடுக்கும். நீள் கோடுகள், குறுக்குக் கோடுகள், வளைவுகள் கொண்ட (ஜியோமெட்ரிக் டிசைன்ஸ்) கோலங்கள் நமது விரல் நடுக்கங்களை - நரம்புத் தளர்ச்சியைப் போக்குவது மட்டுமின்றி தைரியம், தன்னம்பிக்கை முதலியவற்றைப் பெருக்கும்.

அழகிய வேலைப்பாடுகள் பத்மம், மயில், கிளி, அன்னம், பூங்கொடிகள் போன்ற சித்திரங்களை கோலமாக வரையும் போது கற்பனைச் சக்தி பெருகும். மனதில் ஆனந்தம் பொங்கும். இதுபோன்ற கோலங்களை வரைகையில் மனசு அங்குமிங்கும் அலைபாயாது. அடுத்தடுத்து கோலத்தை எப்படி அழகு செய்யலாம் என்பதிலேயே

நாம் கவனமாக இருப்பதால் நடந்து போன சோகங்களை நாம் மறக்கிறோம். எதிர்காலத்தில் நம்பிக்கை வைக்கிறோம். நல்ல கற்பனைகளில் மனசு ஆழ்ந்திருக்க - முகத்தில் தானாகவே சாந்தமும், கருணையும், புன்னகையும் தேடி வந்து குடி கொள்கின்றன.

அந்த நாளில் புத்த பிட்சுகளும், தவயோகிகளும் கைதேர்ந்த சித்திரக்காரர்களாக விளங்கினர். அஜந்தா, எல்லோராவும், தெற்கே சித்தன்ன வாசலும் இதற்கு சாட்சி. ஒவ்வொரு பெண்ணும் அன்றையப் பொழுதை அழகான கோலத்துடன் தொடங்கும் போது, அந்த நாளில் தனக்கு ஏற்படக் கூடிய எல்லாப் பிரச்சினைகளையும் இன்முகத்துடன் சமாளிக்கக்கூடிய சக்தியைப் பெறுகிறாள்.

சகோதரி மதிஒளி, விஜயலக்ஷ்மி இருவரும் இந்தியப் பெண்களுக்குள்ளேயே அமுங்கிக் கிடக்கும் அழகுணர்ச்சியை, கலைத்திறனை, வழி வழியாய் வந்த கலாச்சாரத்தை மறுபடியும் தேடிக் கண்டுபிடித்து, புத்துயிர் கொடுக்கிறார். அவருக்கு என் பாராட்டுக்கள்.

மனைக் கோலம் அழகுடையதாக இருப்பின் மணக்கோலம் தேடி வரும். மனக்கோலம் சிறப்புடையதாக இருப்பின் நமது மனக்கோலம் சிறப்பாய் அமையும். மனக்கோலம் மட்டும் சிறப்பாய் அமைந்து விட்டால் கடவுளின் திருக்கோலம் அங்கே நிரந்தரமாய் நிற்கும். இப்படி மனக்கோலத்தில் - கடவுளின் திருக்கோலம் நல்லபடி அமைந்து விட்டால் தவக்கோலம் எதற்கு... வா என்றழைத்தால் வருவான் இறைவன்... இப்படி உட்கார் என்று ஒரு கோலத்தை வரைந்து சுட்டிக் காட்டினால் புன்னகையுடன் அதில் வந்து அமர்வான். அதுமட்டுமில்லை. 'அடுத்து உனக்கு நான் செய்ய வேண்டியது என்ன?' என்றும் அன்புடன் கேட்பார்.

ஆதலால் -

நமது வாழ்க்கையை மேம்படுத்த - நாம் உயர்வுற - எடுங்கள் கோலப் பொடியை... வரையுங்கள் கோலத்தை... மதிஒளி அவர்களின் இந்த நூலும், அவரது துணையும் இருக்கும் வரையில் நித்தமும் புதுக் கோலம்தான். புத்துணர்ச்சிதான்.

வாழ்த்துக்கள்.

அனுராதா ரமணன்

# "உள்ளாய் நிறைந்த ஒளி"

**கோ**லம் என்பது நமது பாரத நாட்டுக்கே உரிய ஓர் ஒப்பற்ற கலை. இறைமை என்பது கோயிலுக்கு மட்டுமே ஏற்பட்ட ஒரு குறிப்பு அல்ல என்பது நமது கொள்கை. "பார்க்குமிடம் எங்கணும் நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்த வடிவம்." இதுவே நாம் கண்களைப் பழக்கி வைத்திருக்கும் பக்குவம். அழகு செய்யும் பொருள்களையெல்லாம் ஆண்டவன் வடிவாகவே எண்ணி அகமகிழ்வது நம் இயல்பு.

பாரத நாட்டில் ஆன்மீக விழிப்புக்காக ஏற்பட்டது மந்திரம், யந்திரம். அதைப் பெண்கள் எளிமையாக அழகாகக் கோலங்கள் வரைந்து நன்மைகள் பலவற்றை அடைந்து வருகின்றனர்.

தாயின் குணநலம், குழந்தைகளிடம் பதிந்து விடுவது இயல்பு. நமது நாட்டில் பண்டிகைகள், மக்கள் மனதைப் பண்படுத்தும் தன்மை மிக்கது. குடும்பத்தலைவி தன் குடும்ப நலம் கருதி தன் குடும்பப் பழக்கம் சிதறாமல் பார்த்துக் கொள்கிறார்கள். அந்தப் பழக்கமே ஊர் பண்பாடாக மாறி விடுகிறது. பின்னர் அது நகரம், நாடு ஆகியவற்றின் சிறப்பான பண்பாடாக நிலைபெற்று விடுகிறது. இதனால் நாட்டின் கல்வி, கலை, கருத்து, நல்லுணர்ச்சி அனைத்தும் உயர்வு பெற்று விடுகிறது.

கோலங்களை உன்னிப்பாகக் கவனித்தால் இருபுறமும் சீராக அமைக்கப்பட்ட கோடுகளுக்கும் வளைவுகளுக்கும் பின்னால், நமது இந்து மதத்தின் புனிதத் தன்மையை விளக்கும் ஒருவித அதீதமான ஆழமும் அவற்றில் புலப்படும்.

நமது புராதனமான இந்து மதத்தின் குறியீடுகள், நமது பழக்கங்களின் வெளிப்பாடாக வரும் உணர்வுகள், இவைதான் கோலம். கோலம் இடுவதென்பதை அன்றாடம் புத்தம் புதியதாகப் புனைய வேண்டிய அரும்பணியாக நாம் கொண்டுள்ளோம்.

சூரியன் கிழக்கே உதயமாகுமுன், அந்த விடியற் காலைப் பொழுதில் சாணமிட்டு, வாயிற்புறத்தைப் பெருக்கி, மெழுகி, அழகான கோலமிட்டு, வாயிற் பிறையில் அகல் விளக்கு ஏற்றி வைத்தால், செல்வத்தின் அதிபதியான திருமகள் விருப்பமுடன் அந்த வாயிலுள் நுழைவாள் என்பது நம் நம்பிக்கை.

வேதம் அநாதியான காலந்தொட்டு வாழ்க்கை முறைகளையும், அறங்களையும், நெறிப்படுத்தித் தந்திருக்கிறது. கோலத்தையும் கூட அதன் அங்கமாகச் சொல்லலாம்.

‘எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர், திண்ணியராகப் பெறின்’ என்பது தமிழ் மறை. யோகத்தினால் சித்திகள் வரப்பெறுதல் இயல்பு. அதே ஒருமுனைப்பட்ட யோகமாக, கர்ம யோகமாகக் கோலமிடும் கலையில் ஈடுபட வேண்டும்.

ஈடுபாடும், மனதின் இனிய உணர்வுகளுமே கோலத்தின் வடிவாக நிலை பெறுகிறது. கணிதத்தை அடிப்படையாகக் கொண்டு புனையப்படும் தெய்வீக உருவகமே கோலம். கணிதத்தை அடிப்படையாகக் கொண்ட ஜோதிடக் கலை, உலகில் மாற்றங்களை, கிரகத்தின் அமைப்புகளைக் கொண்டு வருமுன் உரைப்பது போல் மற்றொரு வடிவமே கோலம். மாற்றங்களுக்குரிய பரிகாரங்கள் எந்தெந்த வகைக் கோலங்கள் இடுவதால் பெறப்படுகிறது என்பதை தர்ம சாஸ்திரம் விரிவாகக் குறிப்பிடுகிறது.

ஆரோக்கியம், செல்வம், குடும்ப உயர்வு, புகழ் இவற்றையெல்லாம் விரும்பாதவர்கள் இருக்க முடியாது. “என்னால் இயன்றது துளி; உன்னால் விரிந்தது வெளி; உள்ளாய் நிறைந்தது ஒளி,” என்ற சத்தியமான உணர்வோடு இறைவனைத் துதிக்கும் போது தோல்விகள் தூசாகிப் போகின்றன. வெற்றிகள் முற்றுமாய் விளைகின்றன.

கோலம் என்ற சொல் எவ்வளவு குளிர்ச்சி பொருந்தியது தெரியுமா? இறைவனின் ஒவ்வொரு அங்கஅசைவையும் கோலமெனும் சொல்லால் நீளக் கவிபாடும் நெகிழ்வின் நெஞ்சம். நின்ற கோலத்தில், நடந்த கோலத்தில், கிடந்த கோலத்தில் கோசலை மைந்தன் கொஞ்சி வருணிக்கப்படுகிறான். நடன கோலத்திற்கு நடராசன் அது தில்லையில் நிகழும் திருக்கூத்து. தவக்கோலத்தில் தரிசனம் தருபவர் தட்சிணாமூர்த்தி. சின் முத்திரையால் சிக்கல்கள் யாவும் அறுத்து, மௌன நிலையில் முழுமையைக் காட்டிவிடும் மோகனக் கோலம் அது.

இந்தக் கோலக் கலை இரண்டாம் நூற்றாண்டில் சோழர்கள் காலத்திலிருந்தே பழக்கத்தில் இருந்து வந்துள்ளது என்பதை அறிய நாம் பூரிக்கிறோம். கோயில்களில் நிகழ்த்தப்பட்டு வந்த பலவகை ஆன்மீகச் சடங்குகளின் மறுபதிப்பாகவே வீடுகளில் ஒவ்வொரு விசேஷத்துக்கும், பண்டிகைக்கும் அவை அவைகளுக்கு ஏற்புடைய கோலங்கள் இடும் பழக்கம் ஏற்பட்டது. இளவேனில் காலத்தின் வருகையைக் குறிக்க, நிறைந்த பருவமழை நாட்களுக்குப் பிறகு, அமைதியையும், அபரிமிதமான விளைச்சலை வாழ்த்த, முற்றிய கதிர் அறுக்கும் முன்னதாக - இப்படிப் பல நேரங்களில் விசேஷமான கோலங்கள் போடப்படுவதுண்டு.

நேராகவும், தலைகீழாகவும் இணைக்கப்பட்டுள்ள இரண்டு முக்கோணங்களைச் சுற்றி இருபத்துநான்கு இதழ் விரிந்த தாமரை இலக்குமி தேவியை இனம் காட்டுவது. அதே போல் இரு முக்கோணங்களைச் சுற்றி பதினாரு இதழ்கள் வரையப்பட்டு நடுவில் புள்ளியமைப்பது சரஸ்வதி அன்னையை நமக்குத் தரிசனமாக்குவது. வளர்ச்சியையும்,

விரிவாக்கத்தையும் இது குறிக்கிறது. ஒன்பது குறுக்கு நெடுக்குப் புள்ளிகளை அடிப்பாகமாகக் கொண்டு அழகான ஸ்வஸ்திக் வடிவம் இடையில் அமையப் பெற்றிருப்பது துர்க்கை அன்னைக்கு உகந்தது.

அடுக்கடுக்காக அமைக்கப்பட்ட உள் வட்டங்களோ சதுரங்களோ உள்ள கோலம் சிவனுக்கு உரியது. வளைவான நெளிக் கோலங்கள் கடலைக் குறிப்பது. சுழலைப் போன்று வரையப்படும் கோலம் உலகத்தின் நடுநாயகமான கதிரவனைக் குறிப்பது. ஆண்டுக்கொரு முறை காகத்திற்கு நன்றி செலுத்தும் முறையிலும் கோலங்கள் வரையப்படுவதுண்டு. ஆனால், அவற்றுள் சிறிதளவு உணவு வகையும் வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

கோலத்தை ஒருவகையில் கண்ணாடிக்கும் உருவகமாகச் சொல்லலாம். உருவத்தைப் பிரதிபலிப்பது கண்ணாடி. உள்ளத்தை, உள்ளத்தின் உள்ளுணர்வுகளைப் பிரதிபலிப்பது கோலம். ஒவ்வொரு நாளும் நமக்கு ஏற்படவிருக்கும் நன்மை தீமைகளை நமக்கு இனங்காட்ட இருக்கும் உணர்வே கோலம். ஒவ்வொரு நாளையும் சிறந்த விதமாய் அமைக்க உதவுவது கோலம்.

காலை வேளையில் ஒரு தெருவில் நடந்து சென்றால் ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் வரையப்பட்டிருக்கும் எழில்மிகு கோலங்களைப் பார்க்கும் போது, ஒரு சிறந்த கண்காட்சியையே பார்த்துக் கொண்டு செல்வது போல் தோன்றாதா? நம்முடைய மதிப்பிற்குரிய பாரம்பரியத்துக்கு நாம் மிகவும் கடமைப்பட்டு இருக்கிறோம்.

கோலத்தின் அமைப்புக்கு அடிப்படையாக விளங்குவது கோயிலில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் யந்திரங்களே. நான்கு மூலைச் சதுரங்களாக இருப்பவை யந்திரங்கள்.

அக்னி வளர்த்து இறைவனுக்குப் படைக்கப்படும் ஆஹுதிகளை ஏற்றுக்கொள்ளும் ஹோம குண்டமும், சதுர வடிவம், சூரிய பகவான் எல்லாத் தெய்வங்களுள்ளும் முதன்மையாகப் போற்றப்படுபவர். அந்த ஆதித்தியனின் மகளின் அம்சமாக விளங்குபவள் 'கௌரி சதுராக்ஷரி' என்னும் பெயருள்ள தாய்.

இந்தக் கட்டுரையின் முதன்மை எண்ணமும் சிந்தனையுமான 'நான்கு' என்னும் எண், அதைப் பற்றிய பல விளக்கங்கள் ஆகியவற்றைக் குறிப்பெடுக்க 'அன்னை கௌரி சதுராக்ஷரி' அருள் வேண்டித் தொடருவோம். நான்கு என்னும் எண்ணுக்குக் கூறப்படும் பலன்கள் என்ன தெரியுமா? மேலோர் நட்புக் கூடும். உதவி கிடைக்கும். தொழில் வளர்ச்சியினால் செல்வம் பெருகும். எதிர்படும் ஆபத்து நீங்கும். மகாலட்சுமியின் கருணையினால் மனை, பூமி இவை கிடைக்கும். ஆரோக்கியம் நிரம்பி இருக்கும்.

நான்காம் எண்ணுக்குரிய நீல நிறத்தின் தன்மை நெருக்கடியான நேரத்திலும் தளராத மன உறுதியைத் தருவது, பெறுவது ஆகியவை தீய எண்ணங்களை மனத்திலிருந்து நீக்கித் தூய வாழ்க்கை வாழச் செய்யும் எண்ணம் கூடும். நிறைந்த மன அமைதி நிலைபெற நீல நிறம் தேவையானது.

கோலத்தைச் சாதாரண அழகானதொரு சித்திரமாக மட்டும் கருதாமல், அதன் ஆழமான தத்துவங்களைப் பற்றியும் நாம் அதிகம் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் அந்தந்தக் கோலங்களை வரையும் போது நம் சிந்தனையில் அந்தந்தத் தத்துவங்களின் தாக்கம் அமைந்து, பலன்கள் பல மடங்காகப் பெருகும். மந்திரங்களைப் பொருளுணர்ந்து ஓதுவதால் ஏற்படும் விசேஷ நன்மைகளைப் போல், கோலத்தைப் பற்றியும் நம்முள் தெளிவான சிந்தனைகள் வேண்டும்.

அடுத்து எண்களைப் பற்றிய சிறப்பைப் பற்றிச் சிந்திக்கலாம். 'ஒன்று' என்னும் எண் அறிவைக் குறிக்கும். இரண்டு என்னும் எண் அந்த அறிவின் சலனத்தைக் குறிக்கும். மூன்று என்னும் எண் அந்த அசைவினால் ஏற்படும் சக்தியைக் குறிக்கும். இந்தச் சக்தியால்தான் உலகமே இயங்குகிறது. ஆகையால் சக்தியின் வடிவாகிய அன்னையும் முக்கோணத்தால் குறிக்கப்படுகிறாள்.

அடுத்து 'நான்கு' என்னும் எண். முதல் மூன்று எண்களின் சக்தியை ஒருநிலைப் படுத்துவது இந்த எண். "நாலு இடத்துக்குப் போய் வந்தவர்", "நாலு பேர் என்ன சொல்வார்களோ?" என்றெல்லாம் குறிப்பிடப்படுவது இந்த நான்கு என்னும் எண்ணின் ஆதிக்கத்திலுள்ளவர்களைத்தான். இவர்களுக்குள்ள பெருமை, "நாலுந் தெரிந்தவர் என்பது". இந்த எண்ணின் முக்கிய தேவதை கணபதி.

இறை வழிபாட்டின் முதல் நிலை ஐந்துகரத்தானை அகமுருகப் பணிதல். பிள்ளையாரின் உருவத்தை எழுந்தருளச் செய்யும் இடத்தில் பிள்ளையார்ச் சக்கரம் கோலமாகப் போட வேண்டும். வலம்புரி விநாயகர் வழிபாடு மிகவும் சிறப்பானது போல் இந்த விநாயகச் சக்கரம் வலச்சுற்றாக அமைவது. 卐 இந்த வடிவில் அமைவது மிகவும் சிறந்தது. இப்படிப்பட்ட வடிவம் படிப்படியாகச் சீரான கதியில் நன்மைகள் தந்து, கடைசி வரையில் அது நின்று நிலைத்திருக்க உதவும் என்பது ஆன்றோர்களின் கணிப்பு, சான்றாகச் சம்பவங்களும் பல நிகழ்ந்திருப்பதும் கண்கூடு. இடச்சுற்றாக 卍 வரையப்படும் பிள்ளையார்ச் சக்கரம் முதலில் வெற்றிகளைத் தந்தாலும், முடிவில் கிடைத்த வெற்றிகளின் பலனைக் குறைத்துவிடக் கூடியது. குத்து விளக்கு ஏற்றி வைக்கும் இடத்தில் இந்த வலம்புரி விநாயகச் சக்கரத்தைக் கோலமாகப் போட்டால் குவிந்திடும் நன்மை. அவிந்திடும் அறியாமை.

பஞ்ச பூதத்தில் 'நான்கு' என்பது பிருதிவி (நிலம்) அம்சம். பிரமனுக்கு 'நான்முகன்' என்றொரு பெயருமுண்டு. வேதங்களின் பிரிவு நான்கு. நாம் வாழும் இல்லங்கள் சதுரம்

அல்லது நீள் சதுர வடிவில் அமைக்கப்படுபவை. இறைவன் உறையும் திருக்கோயில்களின் அமைப்பும் சதுரம். வீட்டில் உள்ள கிணறுகள் வட்ட வடிவில் அமைந்திருக்கும். சில கோயில்களில் கிணறுகள் சதுர வடிவில் அமைந்திருக்கும். அவை மிகவும் சிறப்புப் பொருந்தியவையாக இருக்கும்.

இறைவனது படைப்பின் இயக்கம் நாம். இறைவனது ஆளுகைக்குட்பட்ட ஒன்பது எண்களின் நாயகர்களாக விளங்குபவர்கள் நவக்கிரகங்கள். நான்கு புள்ளிகள், சமமான இடைவெளியில் நீள, அகல வடிவில் இணைக்கப்படும் கோடுகளாலான வடிவமே சதுரம். நவக்கிரகங்களில் நான்கு என்னும் எண்ணுக்கு அதிபதியாக உள்ளவர் இருவர். அவர்களே ராகுவும் சுக்ரனும்.

நான்கு என்னும் எண்ணுக்கு அமைந்துள்ள இந்த விசேஷ காரணங்களால்தான் பூஜைக்குரிய விசேஷ யந்திரங்களின் சதுர வடிவம் போல், சதுர வடிவமுள்ள கோலங்களும் விசேஷமாகக் கருதப்படுகின்றன.

ஒற்றைப்படை எண்ணில் புள்ளிகள் இணைந்து அமைந்த சதுரக் கோலத்தால் ஆயுள், புத்திர பாக்கியம், வியாபாரம், விருது சகோதர உறவு முதலியன சிறப்பாக அமைகிறது. இரட்டைப்படை எண்ணில் புள்ளிகள் இணைந்த சதுரக் கோலத்தால், வித்தையில் விருப்பம், சுகமான வாழ்க்கை, பொருள் வரவு, புகழ், பயணம் இவை விசேஷமாக அமைகின்றன.

'நான்கு' என்னும் எண்ணின் சிறப்புக்குரிய 'யுரேனஸ்' என்ற கிரேக்கக் கடவுள் சூரியனின் பாதையில் ஏழாவது நிலையில் உள்ளது. ஆங்கில முறையில் சூரியனின் சலனத்தை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்படும் இடம் முறைக்குச் 'சாயன முறை' என்று பெயர்.

ஜாதகங்களின் ராசி அமைப்பும் கட்டங்களில்தான் வரைந்து காட்டப்படுகிறது. ஒரு பெரிய சதுரம். அதையொட்டி பன்னிரண்டு சிறிய சதுரங்கள். அவற்றை இணைப்பது ஒரு பெரிய சதுரம். ஆக இந்தச் சதுரங்களின் கூட்டுத் தொகை 14. எண் கணித முறைப்படி 14 என்னும் எண்ணின் கூட்டுத் தொகை 1+4=5 ஐந்து என்ற எண். ஒன்று முதல் ஒன்பது வரையிலுள்ள எண்களுக்கு நடுவாக அமைந்துள்ளது. இந்த எண்ணுக்கு மோக சக்தியுண்டு. இவ்வெண்ணின் பலமுடையோர் ஜனங்களால் பெரிதும் விரும்பப்படுவார்கள். இந்த எண் புதனின் ஆட்சிக்கு உட்பட்டது.





சதுர வடிவில் வரையப்பட்டுள்ள ஜாதகத்தின் ராசிக்குரிய தேவர்கள் இடம் விட்டு, இடம் பெயரும் சுழற்சித் தன்மையில் இருக்கிறார்கள். அது வட்டம். அதைப்போன்றே வாழ்நாட்களில் நாமும் பலவித மாறு தலுக்குட்பட்ட சுழற்சி நிலையிலேயே இருக்கிறோம். சதுரத்திற்குள் வட்டம் என்பது மனித வாழ்வின் கணிதம். அதனால் ஆங்கில முறையில் ராசிகள் வட்ட வடிவில் சூரியனை மையமாகக் கொண்டு குறிப்பிடப்படுகிறது.

தெய்வங்கள் உறையும் திசைகள் நான்கு. 'சாம, பேத, தான, தண்டம்' என்பவை நால்வகை உபாயங்கள். இந்த 'நான்கு' என்னும் எண்ணின் அதிர்ஷ்டமான நிறம் நீலம்.

நற்பலன்கள் கூறுவதற்கு நாம் தாயக்கட்டை, சோழி, வெற்றிலை முதலியவை களை உபயோகிக்கிறோம். 'தாயக்கட்டை', இது அறிவைக் குறிப்பது. இதன் அமைப்பில் நான்கு நீள் சதுரங்களும் இரண்டு சதுரங்களும் இருப்பது புலனாகும். சோழி, சங்கின் வடிவுள்ளதால் இலக்குமியைக் குறிப்பது. வெற்றிலை மங்களத்தைக் குறிக்கும்.

நான்கு மூலைகளைக் கொண்ட சதுரத்தைப் பற்றி விரிவாகச் சிந்தித்தோம். கோலம் இடும் போது இத்துணை எண்ணங்களும், மனதில் நிறையப் பெற்றால், வரையப்படும் கோலமும் சிறப்பாகவே அமையும். சதுரக் கோலங்கள் வெள்ளை மாவினால் வரையலாம். ஒரு கோலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட சதுரங்கள் இருந்தால், அது மிகவும் விசேஷமானது. அதிகப்படியான சதுரங்களை வண்ணப் பொடிகளைக் கொண்டு நிரப்பினால் கோலம் மேலும் எழில் கூடி நிற்கும்.

முக்கியமாகக் 'கண் படுதல்' எனும் பெயரே பெண்களுக்கு அதிக பயத்தினை தோற்றுவித்துள்ளது. நல்ல காரியங்கள் செய்யும்போது, நல்ல பொருட்கள் மீதும் கண் பட்டு (திருஷ்டி) தீங்கு நேருகிறது என்ற நம்பிக்கை பலரிடம் உண்டு. ஏற்படும் விபத்துக்களுக்கும் வரும் வியாதிகளுக்கும் 'கண் படுதல்' ஒரு முக்கிய காரணம் என்று கருதப்படுகிறது. ஆகவே, அதற்கு எதிராக அதை முறியடிக்க இந்தக் (வடிவங்கள்) கோலங்கள் துணைபுரிகின்றன. எலுமிச்சம் பழத்தில் ஊசிகளைக் குத்தியோ, முட்களை குத்தியோ வீட்டின் முன்புறம் தொங்கவிடுதல் திருஷ்டி பட்ட நபர்களை எலுமிச்சம் பழத்தினால் மும்முறை சுற்றி அதைத் தூர எறிந்து விடுதல் ஆகியவை இவற்றை முறியடிக்கிறது.

திருஷ்டியைத் தடுக்க அதற்கான வடிவங்களைச் சேவைகளில் நூல் சேவை செய்வது - வேல் போன்ற வடிவம், கூரிய முனையுடைய சித்திரங்கள் முதலியன - ஒரு முறை. அது போலவே மீனின் முதுகெலும்பில் உள்ள வடிவத்தைப் போலும், வில் வடிவத்திலும் நூல் வேலைப்பாட்டுடைய சேலைகள் எம்பிராய்டரி செய்வதுண்டு.

திருஷ்டி படுவதைத் தடுப்பதில் ஐந்தாம் நம்பருக்கு வலிமை அதிகமாம். ஆகவேதான் லிங்காயத்து சமுதாயத்தினர் வீட்டின் முன்புறம் வாசல்படிகள், கதவுகளில் மஞ்சள், சிவப்பு மண், எலுமிச்சம் பழம் இவற்றிலான ஐந்து புள்ளிக் கோலங்களைப் போடுகின்றனர். இதைப் போலவே தானியக் களஞ்சியங்கள், வண்டிச் சக்கரங்கள், வண்டிகள், பெரும் மதிப்புடைய பீரோக்கள் முதலியவற்றிலும் கூட இந்தக் கோலங்களைப் போடுகின்றனர். ஐந்து முனையுடைய நட்சத்திர கோலம் தீய சக்தியை நீக்கும் சக்தி வாய்ந்தது என்று நம்பப்படுகிறது.

இந்த நூலில் கோடுகளால் இணைக்கப்பட்ட கோலங்களைப் பற்றி அதிகம் பார்த்தோம். நான்கு கோடுகளால் இணைக்கப்படுவது சதுரம் அல்லது நீள் சதுரம். மூன்று கோடுகளால் இணைக்கப்படுவது முக்கோணம். கோடுகளைக் கொண்டு வரையப்படும் கோலங்கள் இந்த இரு அளவுகளின் மடங்காகத்தான் இருக்கும்.

பாரத நாட்டின் உட்பகுதியைவிட கடலோரமுள்ள பகுதிகளில்தான் கோலக்கலை அதிகம் பயிலப்படுகிறது. தமிழகத்திலும், கேரளாவிலும் இதனைக் ‘கோலம்’ என்று அழைக்கிறோம். ராஜஸ்தானில் ‘ரங்கோலி’ என்றழைக்கின்றனர். வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் ‘அல்பனா’ என்றும், பீகாரில் ‘அரிபனா’ என்றும், ஆந்திராவில் ‘முகுலு’ என்றும் இந்தக் கோலக்கலையை அழைக்கின்றனர்.

தெளிவான சிந்தனையில் விளைவான எண்ணங்கள் விளையாடும் எழுத்துக்களில் விரிவாக்கித் தன்னை மட்டுமல்ல நம்மையும் நிறைவாக்கி வைத்திருப்பவர் அன்புச் சகோதரி அனுராதா ரமணன் அவர்கள்.

கோலக் கலையிலுள்ள அவரது சீலக்கருத்துக்கள் மேலுக்கு மட்டுமல்ல, ஆழப்புதைந்த அழகுகளுக்கும் நயங்களுக்கும் ஆரத்தி எடுக்கும் விதம் அமைந்துள்ள அவரது முன்னுரையை எங்கள் முயற்சிக்குப் பெற்ற மூதுரையாகக் கொள்கிறோம். அவர்களுக்கு எங்கள் நன்றி.

நான்கு பகுதிகளாக இந்த நூல் முன்பு வெளியிடப் பெற்றது. அவை யாவும் ஒன்றிணைத்து ஒரே நூலாக இருக்க வேண்டும் என்ற பலரது பரிந்துரைக் காரணமாக இந்த நூல் இப்போது உங்கள் கையில்.

கோலக்கலையைப் பற்றிப் பல ஆராய்ச்சிகள் செய்துள்ளவர் கோவையைச் சேர்ந்த திரு. சாவி. தம்பிராசு அவர்கள். எங்களுக்கு கோலக் கலையைக் கற்றுத் தந்தவர். அவர்கட்கு எங்கள் நன்றி எழுத்தில் முடியாதது.

இந்தப் புத்தகத்தைத் தொகுக்க வழிகாட்டியவரும் அவரே. எனவே இந்நூலினை அவருக்குச் சமர்ப்பிப்பதில் நாங்கள் பெருமகிழ்வு கொள்கிறோம்.

மிகக் குறுகிய காலத்தில், மிக மிகத் தெளிவாக இந்த நூலினை அச்சிட்டு எங்கள் எண்ணங்களைச் சீரிய முறையில் வெளிக்கொணர்ந்த இலக்குமி நிலையத்திற்கு எங்கள் நன்றி உரியது.

பக்தி மனத்தோடும், குறைவில்லாத வடிவுடனும் கோலங்களைப் போடப் பழகிக் கொள்ளுவோம். பரமனருள் என்னும் பரிசை அடைவதற்குப் பல காலம் நோன்பிருக்கத் தேவையில்லை. பக்தி வளர்க, பாசம் வெல்க, பழக்கம் தொடர்க, ஒழுக்கம் நிறைக, ஆற்றல் பெருக, அமைதி விரைக.

மதிஒளி

# கோதையர் இடும் கோலங்கள்

தமிழ்நாடு, கர்நாடகம், ஆந்திரா முதலிய இடங்களில் எண்ணற்ற வடிவங்களில் சித்திரங்கள் கூடிய தெய்வீகத் தன்மை மிக்க கோலங்கள் போடுவது பழக்கத்தில் உள்ளது. இவற்றைப் போடுவதால் துர்தேவதைகள், துரத்தப்படுகின்றன. கருணையுடன் கூடிய தெய்வங்களின் கோபங்கள் தணிந்து சாந்தி கிடைப்பதாக இந்தியப் பெண்கள் நம்புகின்றனர். இந்த நம்பிக்கை பெண்களிடம் அதிகமாகப் பரவி அது அன்றாட வாழ்வின் ஒரு பகுதியாக மாறி விட்டிருக்கிறது.

ஒரு சாராரின் உண்மையான பக்தி தந்திர மந்திர தன்மை கொண்ட வடிவங்கள் - அவரவர்கள் உடுக்கும் உடை முதல் உபயோகிக்கும் மண்பாண்டங்கள் வரை பரவி நிற்கின்றன. இவைகள் முக்கியமாக வீட்டில் கெட்ட தேவதைகளின் ஆக்கிரமத்தைத் தடுத்துத் தூய்மைப்படுத்தித் தங்களுக்குப் பாதுகாப்புத் தருகின்றன என நம்பப்படுகிறது.

புள்ளி என்பது இரக்கமுள்ள கண்களைக் குறிப்பது. ஆகவே, புள்ளி மிகச் சக்தி வாய்ந்த ஒன்று. தீய சக்தியை விரட்டுவதில் வலிமை பெற்றது என்று நம்பப்படுகிறது. பல்வேறு கிராமங்களிலும் உள்ள தேவதைகளின் சிலைகளின் கண்கள் மட்டும் மிகப் பெரிதாகவும் ஊடுருவும் தன்மை வாய்ந்தது போலவும் தோற்றமளிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். இரக்க குணம் கொண்ட கண்களை உடையதால் தங்களுக்குப் பாதுகாப்பைத் தருவதாக நம்புகின்றனர். பிரதான தெய்வமான அம்பிகையுடன் சம்பந்தப்பட்டிருப்பது கரும்புள்ளி. அதனால்தான் பெண்கள் நெற்றியில் கறுப்புத் திலகம் இட்டுக் கொள்வதும், கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு வைத்துக்கொள்வதும் உண்டு. அதன்மூலம் தங்களுக்குப் பாதுகாப்புக் கிடைப்பதுடன் மனப்பலமும் கிடைப்பதாக மக்கள் கருதுகின்றனர்.

சந்திரன், சூரியன் போன்ற இரு உருவங்களும் கடவுளின் இரு கண்கள் என நம்பப்படுவதால் அவற்றின் வடிவங்கள் வீட்டின் முன்புறம், தானியக் களஞ்சியங்கள் முதலிய இடங்களை அலங்கரிக்கின்றன. கோவிலின் கதவுகளில் உள்ள வட்டமான இடைவெளி விக்கிரகங்களின் மீது திருஷ்டி படுவதைத் தவிர்ப்பதற்கென அமைக்கப்பட்டுள்ளது. கிராம வாழ் மக்கள் தங்கள் நெற்றியிலும், கண்களின் இமைகளின் ஓரங்களிலும் உருவம் பச்சைக் குத்திக் கொள்கின்றனர். அதற்குக் காரணம் அவர்கள் இறந்த பிறகு பேய்களாக, ஆவிகளாக மாறிச் சுற்றித் திரியாமல் இருக்கலாம் என்று நினைக்கின்றனர்.

பிறை வடிவத்தின் நடுவில் புள்ளி போன்ற வடிவம் கண்களையும், வட்டத்தில் சிலுவை (க்ராஸ்) வடிவம் சூரியனின் சுழற்சியையும் குறிக்கிறது. பிறை திலகத்தைப் போலவே சிலுவை வடிவமும் வாழ்க்கையின் ஆரம்பத்தையும், முடிவையும் குறிக்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ளதாகச் சொல்லப்படுகிறது.

கொடைத் தன்மையினையும், இரக்க குணத்தையும் பிரதிபலிப்பது 'கை' வடிவம். கர்நாடகத்தில் குழந்தைகள் பிறந்த அறைகளில் கை வடிவம் போன்ற சின்னம் வரைவது வழக்கம். பௌர்ணமியில் மாடுகள்மீது நீரில் நனைத்த சாக்குக் கட்டிகளைக் கொண்டும், சிவப்பு மண்ணையும் கொண்டு கை முத்திரைகள் போன்ற வடிவங்களைப் போடுவது உண்டு. நோயுற்ற மாடுகளுக்கு ஐந்து விரல்கள் கொண்ட 'கை' சின்னத்தை சூடு போடுவது இன்றும் கிராமப்புறங்களில் பழக்கத்தில் உள்ளது.

எப்படி கண், கை வடிவங்கள் இரக்கத் தன்மையை பிரதிபலிக்கின்றனவோ அதுபோலவே பாதங்களின் வடிவமும் அத்தன்மை உடையதாகக் கருதப்படுகின்றன. புலியின் கால் விரல்களை போன்ற வடிவங்கள் கெட்ட தேவதைகளை விரட்டுவதில் வல்லமை பெற்றவை. லக்ஷ்மி, கிருஷ்ணர், கௌரி போன்ற கடவுள்களின் பாதங்கள் மிக மிக விசேஷமானவை. ஆகவே, அவற்றின் வடிவங்கள் வீட்டை நோக்கி வருவது போலப் போடப்படுகின்றன.

சில குறிப்பிட்ட பறவைகளின் பாதங்களின் வடிவங்களைப் போடுவதின் மூலம் குடும்ப வளம் பெருகுவதாகக் கர்நாடக மாநிலத்தில் நம்பப்படுகிறது. இக்காரணத்தினால் திருமணங்களில் வைக்கப்படும் மண்பாண்டங்களில் இந்தக் குறிகள் போடுவது வழி வழியாக வந்து கொண்டிருக்கிறது.

மஹா விஷ்ணு, சந்திரன், சூரியன், துளசிதளம் இவற்றின் உருவங்களை தன் தேவியான லக்ஷ்மியை பாதுகாக்கவென, அவளின் திருக்கரங்களில் அமைத்திருந்தார். ஆகவே, பச்சைக் குத்திக் கொள்பவர்களுக்கு மஹா விஷ்ணுவின் பாதுகாப்பு கிடைக்கிறது என்பது உறுதியாக்கப்பட்டுள்ளது.

சில இடங்களில் வயதுக்கு வந்த ஆண்களுக்கும், பெண்கள் முதல் பருவமடைந்த முதல் தினத்தன்றும் பச்சைக் குத்துவது பழக்கமாகி இருக்கின்றது. உண்மையிலே பச்சைக் குத்திக் கொள்வது விரதங்கள், நோம்புகள் இருப்பது போன்ற ஒன்றுதான். சுமங்கலிகளுக்கு இனவிருத்தி பெற உதவும் என்ற நம்பிக்கையில் தாமரை, மல்லிகைப் பூ, வாழைப்பழம், மீன்கள், தேள்கள் இவற்றின் உருவங்கள் பச்சை குத்தப்படுகின்றன.

வீடுகளின் முன் போடப்படும் கோலங்கள், அமைப்பு, உருவங்கள் பெருகிக்கொண்டே போவது நம்பிக்கைகளின் மூல காரணமே. மனிதன் தன்னை

உள்ளுக்குள் வைத்துப் பாதுகாத்து வருவது இல்லமே என நம்புவதால் அந்த வீட்டைப் புனிதமாக வைத்திருக்க, வீட்டின் நுழைவாயிலில் கோலம் போடுகின்றனர். விடியற்காலை வீட்டின் முன் கோலம் போட்டு மொட்டு வைப்பது (பூ இதழ்) தீய சக்தி, பேய், பிசாசுகளை விரட்டுகிறது. அப்படிக் கோலம் போடுவதின் மூலம் அந்த வீடு புனிதமாகித் தெய்வம் உள்ளே வர வழி வகுக்கிறது. கர்நாடகத்தில் காலையில் வாயிற் படியை நோக்கி - லக்ஷ்மியை வரவேற்கும் வழி அமைப்பது வழக்கம். மாலையில் வாயிற்படிக்கு இணையாக - லக்ஷ்மி போய்விடாமல் தடுக்கப் போவது போல, கோலங்களைப் போடுகின்றனர்.

செட்டி நாட்டின் கோலங்கள் யாவுமே இரட்டை அடுக்குப் புள்ளிகளை மூலமாகக் கொண்டதுதான். அவை கணவன்-மனைவி உறவினைப் பிரதிபலிக்கிறதாம். துக்கத் தினங்களில் மட்டுமே ஓர் அடுக்குப் புள்ளி கோலம் போடுகிறார்கள். ஓரிரு ஜாதிகளில் வீட்டில் ஒருவர் மரணமடைந்து விட்டால் பதின்மூன்று நாட்கள் கோலங்கள் போடுவதில்லை. அந்த நாட்களில் இறந்து விட்டவரின் ஆவிகளுக்கு உணவு அளிப்பதே அதற்குக் காரணம் கோலங்களைச் சிவப்பு, வெள்ளை நிறங்களில் மட்டுமே போடுகின்றனர். இதற்குக் கறுப்பு நிறத்தை உபயோகிப்பதில்லை.

நீரில் நனைத்த சாக்குக் கட்டிகளால் கோலங்கள் போட்டால் வீட்டில் வறுமையும், துன்பமுமே ஏற்படும்.

இப்போது நிலவி, வளர்ந்து வரும் கோல வகைகள் வழிவழியாய் மேற்கூறிய காரணங்களினால் தொடர்ந்து வந்தாலும், வீட்டிற்கு அழகூட்டவும் கோலம் போடப்படுகிறது. சில உருவங்கள், ஒரு குறிப்பிட்ட பண்டிகையையோ கடவுளையோ குறிக்கும் விதத்தில் அமைந்துள்ளது ஹிருதய கமலக் கோலம். லக்ஷ்மி பண்டிகைகளிலும், சூரியன் தேரோட்டும் கோலம் பொங்கல் பண்டிகைகளிலும் போடப்படுகின்றன. இந்தக் கோலங்களை மற்றவர்கள் மிதித்து அழித்து விடாமல் இருக்கவும். அந்தந்தக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்வது போலவும் பூஜை அறைகளில் போடப்படுகிறது. முக்கியமான பண்டிகைத் தினங்களிலும், விரத தினங்களிலும் பொட்டு வைத்த கோலங்கள், வீட்டைப் புனிதப்படுத்துவதற்கெனப் போடப்படுகின்றன. இந்தக் கோலங்கள் கடவுளின் பீடங்கள் மற்றும் பூஜை செய்ய அமரும் இடங்களிலும் போடப்படுகின்றன. இவைகள் வீட்டை புனிதமாக்குகின்றன என்று நம்பப்படுகிறது.

இனி இக்கோலங்கள் அமைக்கும் வழிகளையும், விதிமுறைகளையும் காண்போம்.

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

# கோதையர் இடும் கோலங்கள்

பாகம் - 1



# 1. திருவருட் கோலங்கள் ஓரெழுத்து வலிமை தரும் கோலங்கள்




## 1. பிள்ளையார் கோலம்

மஞ்சள் பிள்ளையார் பிடித்து பூஜை செய்யும் போதும், பிள்ளையார் சதுர்த்தி அன்றும் இக்கோலத்தை இட்டுச் சிறப்பு செய்யலாம். நடுவில் 'ஸ்ரீ கணபதி துணை' என்ற பெயரினை எழுத வேண்டும்.

## 2. முருகனுக்கு உகந்த கோலம்

இக்கோலம் அழகு, அறிவு, ஆரோக்கியம் பெற துணை செய்யும். இதை செவ்வாய், சனிக்கிழமை இரண்டு தினங்களிலும் போட்டு நடுவில் 'ஓம் சரவணபவ' என்று எழுதி வழிபட வேண்டும்.





## 3. நினைவாற்றலுக்கு ஒரு கோலம்

முக்கியமாகப் படிக்கும் குழந்தைகளின் நினைவாற்றலுக்கு இக்கோலம் பெரிதும் நன்மை தரும். அவர்களின் மறதியைப் போக்கி நினைவாற்றலைப் பெருக்கும். இதனை திங்கள், வியாழன் இரண்டு நாட்களிலும் போட்டு வழிபடலாம்.

## 4. எல்லா கலைகளும் கைவரப் பெற கோலம்

இதனை வியாழன், வெள்ளி முதலிய நாட்களில் கோலமிட்டு வழிபட்டால் கலைகளில் சிறந்தவர்களாக விளங்கலாம்.





## 5. நோயின் துன்பம் நீங்க

வீட்டில் நோயுற்ற வர்கள் இருந்தால் இக் கோலத்தை செவ்வாய், வியாழன், சனி, ஞாயிறு முதலிய நாட்களில் இட்டு வழிபட்டால் வியாதியின் கடுமை குறைந்து நோயி லிருந்து விடுபடலாம்.



## 6. கதிரவன் கோலம்

உடல் ஆரோக்கியத் திற்கும், கண் பார்வைக்கும் பொங்கல் பண்டிகை அன்றும் இதனைப் போட்டு நன்மை அடையலாம்.



## 7. ஸ்ரீதேவி கோலம்

இக்கோலத்தை செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் இட்டுப் பூஜித்தால் வீட்டில் மன அமைதியும், செல்வமும் பெருகும்.




## 8. ஸ்ரீ விஷ்ணு கோலம்

இக்கோலத்தை வியாழன், சனிக்கிழமைகளில் இட்டு நடுவில் 'ராம' என்று எழுத வேண்டும். இதனால் வீட்டில் உள்ளவர்களின் மனபயம் நீங்கும். கஷ்டங்கள் விலகும்.



## 9. சிவ, விஷ்ணு கோலம்

இக்கோலத்தை திங்கள், வியாழன், சனிக்கிழமை ஆகிய தினங்களில் இட்டால் வீட்டில் மன அமைதி நீடிக்கும்.




## 10. ஸ்ரீ ஆஞ்சநேயர் கோலம்

இக்கோலத்தை வியாழன், சனிக்கிழமைகளில் இட்டு நடுவில் 'ராம' என்றும் எழுத வேண்டும். இதனால் மன தைரியம், உடல் ஆரோக்கியம், பக்தி, நற்குணங்கள் ஏற்படும்.




## 11. ஸ்ரீ கிருஷ்ணர் கோலம்

இக்கோலம் வியாழன், சனி, ஞாயிறு முதலிய தினங்களில் இடலாம். நடுவில் ஸ்ரீ கிருஷ்ணா அல்லது ஸ்ரீ ராதேகிருஷ்ணா என்று எழுத வேண்டும். இதனால் குழந்தைகள் கூர்ந்த அறிவும் ஆரோக்கியமும் பெற்று விளங்குவர்.

## 12. ஐம்புலன்களுக்கும் உகந்த கோலம்

இக்கோலத்தை எல்லா தினங்களும் இடலாம். நமது உடலில் உள்ள எல்லா உறுப்புக்களும் ஆரோக்கியமாகவும் அமைதியாகவும் செயல்படும்.





**மங்கள தீபம்**

17 புள்ளி 17 வரிசை



**சூரியன் விஷ்ணு அம்சமான ஸ்வஸ்திக் கோலம்**

17 புள்ளி 17 வரிசை

# ஓரெழுத்தில் வலிமை தரும் கோலங்கள்

தாமரை வடிவில் கோடுகள் வரைந்து கோலமிடப்படும் போது அதிலே இறை அருளால் நமது துன்பங்கள் வில், அம்பு கொண்டு அழிக்கப்பட்டு பாதுகாப்பு உணர்ச்சி ஏற்படுகிறது. அதனால்தான் செம்புத் தகட்டில் வரையப்பட்டு பூஜிக்கப்படும் யந்திரம் எனப்படும் கோலங்கள் தூய்மையும் கூடியதாகக் கருதப்படுகிறது. ஓரெழுத்தில் வலிமை தரும் கோலங்கள் தரையில் வரையாமல் பித்தளைத் தட்டில் விபூதி, மஞ்சள் பொடி, சந்தனத்தூள் கொண்டு முனை மழுங்கிய ஊசி அல்லது குச்சியினால் வரைந்து பூஜிக்கலாம். பின்னர் விபூதி, மஞ்சள் தூள் முதலியவற்றை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒருமுறை தட்டில் போட்ட கோலத்தை பல நாட்கள் அழிக்காமல் வைத்திருக்கவும் செய்யலாம். முக்கோணங்கள் அமைத்துப் போடப்படும் கோலங்கள் மிகவும் விசேஷமானது.

பூமியில் இக்கோலக்கலை பல நன்மைகளைத் தந்து துன்பங்களை நீக்கும் வலிமை மிக்கது. கோலம் இட்டு ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்தால் அந்த ஒளியில் வித்யை பிரகாசிக்கிறது. வாசலில் நீர் தெளித்து கோலமிடுவது மக்களின் நன்மையை வேண்டி உருவகிப்பதாகச் சொல்லப்படுகிறது. நறுமணக் கோலங்களால் காற்றிற் சுகம் கூடி மனச்சாந்தியை ஏற்படுத்துகிறது.

ஓரெழுத்தில் வலிமை தரும் கோலத்தின் கீழ் எழுதப்பட்டுள்ளது இறைவனைத் துதிக்கும் பாடல்களே. கோலமிட்ட பின் இதனைப் படித்துப் பயன் அடையலாம்.

### ஆதிதேவன்

பரப்பிரம்மம் நீயே,

பரவீடும் நீயே

பரவும் தூய்மையில் தூய்மையும் நீயே

புருடன் பிறப்பிலான் ஆதி தேவனே

புவியில் நிறைந்த இறையவனேயென.




### பிள்ளையார்

யானே தொடக்கம்

உலகில் எதற்கும் யானே

இயக்கம் எங்கும் எதிலும் யானே

என்னும் உண்மை உணர்ந்த

ஞானியர் தன் வயமாகி வழிபடுகின்றார்.




### முருகன்

பிறப்புத் தொடக்கம்

இலாத என்னைப்

பெருநில நாயகனென

அறிபவர் யாரோ

மறப்பாம் பாபம்

தன்னில் விடுபட்டு

மயக்கம் தீர்ந்து

நிலைபெறுகிறார்.



**லக்ஷ்மி**

புறப் பொருள் தன்னால்
பெற்றிடும் இன்பம்
பெருந்துயர் தருபவன்
பிறப்பிடமாகும்
பிறப்பும், இறப்பும் உடைய
அவ்வன்பின் பேரறிஞன்
களைப்புறுவதில்லை ஐயா!




**அக்னி**

செய்திடும் செயலில் பயன் எடுத்து
செய்யத்தக்க செய்து துறவி யோகியுமாவான்
செயலற்றவனும் செந்தழல் ஓம்பும்
செய்கையற்றவனும் துறவியர் ஆகார்




**சிவம்**

ஏக எழுத்து 'ஓம்' அதை உச்சரித்து
என்னையே முறைப்படி சிந்தித்து உடலில்
தேக வியோகமாகிடும் யோக புருடன்
சீருடன் பரம கதியினைப் பெறுவான்



### மஹேசன்

உந்தன் மனத்தை எந்தனுக் காக்குக
ஓங்குமென் பக்தனாய் வேள்வி செய்திடுக
எந்தன் திருவடி வணங்குக, உண்மையாய்
என்னையே எய்துவாய் எனக்கினியவன் நீயே




### சக்தி

என்னையே எல்லா இடத்திலும் காண்போன்
எல்லாப் பொருளிலும் என்னையே காண்போன்
அன்னவன் தனக்கு நான் மறைவதில்லை
அவனும் உலகில் எனக்கு மறைந்திடான்




### ஸ்ரீ விஷ்ணு

பிரம்மத்தில் புத்தியை
பிழையற நாட்டிப் பின்னமில்லாது மேலவர்
பாபம் களைந்தே
இருக்கின்ற மேலவர்
பாபம் களைந்தே
என்றும் மீளாப் பதம்
அடைகின்றார்.



### ஸ்ரீ லலிதா

உடலின் வாயில்கள் அனைத்தையும் மூடி

உள்ளத்தினுள்ளே மனதை இழுத்தி நிறுத்தி

உடலின் உச்சியில் உயிரைச் செலுத்தி

உயிர் தாரணை யோகத்தில் உறுதியும் பெற்றுஉய்ய




### ஸ்ரீ கிருஷ்ணன்

அகத்தை என்பால் வைத்து அதனுள்ளே

அமைதியும் புலன்கள் அனைத்தையும்

சுகத்தில் திளைத்து எனை உணர்ந்தோர்கள்

திருப்தி மகிழ்ச்சியில் எனைப் புகழ்வார்கள்.



### ஆஞ்சநேயர்

எந்த மகிமையால் உலகம் முழுவதும்

எதிலும் நிறைந்து விளங்கும் தங்கள்

தந்திர நுட்பம் முழுவதும் எனக்குச்

சந்தேக மறவே தெளிவாய் உறைத்திடு



### துர்கை

தன்னை வசம் கொண்ட தவயோகி யாரோ
தன் மனத்தால் கர்மப் பலன்களைத் துறந்து
ஒன்பது வாயில் உடல் கோட்டையுள்ளே
ஒன்று செய்வது செய்விப்பதின்றி உவந்திடுகிறான்




### அஷ்ட திக்பாலகர்

சிந்தித்து நானே என்னும் நின்னைத்
தெளிவாய் உணர்வது எங்ஙனம் கூறு?
எந்தெந்த பாவனை தன்னால் நினையான்
எண்ணிக் கருதிட வேண்டும் இறைவா




## கண் திருஷ்டி நீக்கும் கோலங்கள்



திருஷ்டி பரிகாரத்திற்கு பச்சை குத்தப் பயன்படும் ஒரு வடிவம்.



புதிதாக சிமெண்ட் பூசப்பட்ட கட்டிடத்திற்கு போடப்படும் 'மங்கள மாலகு' எனும் கோலம்.

# 2. நவக்ரஹ கோலங்கள்

## (ஸ்ரீ வால்மீகி இராமாயண பாராயணக் கோலங்கள்)

கவனத்தோடு நல்ல முறையில் செய்யப்படும் கோலங்கள் மனிதரை மட்டும் கவருவதில்லை. இறைவனையும், தேவதைகளையும் நினைத்து தினசரி நாம் போடும் கோலங்கள் நன்மையைத் தருகின்றன. ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஏழு நாட்களுக்கும் தனித்தனி கோலங்கள் உள்ளன. நவக்கிரகங்கள் என்று சொல்லும் ராகு, கேது என மேலும் இரு கோலங்கள் உள்ளன. ராகு கோலத்தை செவ்வாய்க் கிழமையிலும் வீட்டில் போடலாம். இந்த ஒன்பது கோலங்களையும் குறிப்பிட்ட நாளில் வழிபாடு செய்யுமிடத்தில் வரைந்து ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திலிருந்து குறிப்பிட்ட பகுதியைப் படிக்கலாம்.

*1. ஞாயிற்றுக்கிழமை - சூரியன், ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தில் பாலகாண்டம் 43வது சர்க்கம்; 2. திங்கட் கிழமை - (சந்திரன்) சுந்தர காண்டம் 5வது சர்க்கம்; 3. செவ்வாய்க் கிழமை - பாலகாண்டம், 36, 37 சர்க்கங்களில் வரும் குமார ஜனனம்; 4. புதன் கிழமை (புதன்) 35வது சர்க்கம் ராம் வருண சம்வாதம்; 5. வியாழக்கிழமை - (குரு) சுந்தர காண்டம் முதல் சர்க்கம், அனுமன் கடலைத் தாண்டும் பகுதி; 6. வெள்ளிக்கிழமை (சுக்கிரன்) பால காண்டம் 73வது சர்க்கம் சீதை விவாகக்கட்டம்; 7. சனிக்கிழமை (சனி) பாலகாண்டம், 30வது சர்க்கம் விச்வாமித்திரர் யாகத்தைக் காத்த பகுதி; 8. ராகு - (செவ்வாய்க் கிழமை) சுந்தர காண்டம், 54வது சர்க்கம் லங்கா தகனம்; 9. கேது - (சனிக்கிழமை) அயோத்யா காண்டம், 50வது சர்க்கம். குகன் சந்திப்பு.*

ஆன்மிக உணர்வையும், கலையறிவையும் வளர்த்துக் கொள்ள இந்தக் கோலங்களும் பிரார்த்தனைகளும் உதவி செய்கின்றன.

## 3. கிழமைக் கோலங்கள்




ஞாயிற்றுக் கிழமை




திங்கள் கிழமை




செவ்வாய்க் கிழமை

சனிக் கிழமை







( செவ்வாய் )

ராகு




( சனி )

கேது



## புதன் கிழமை

(அறிவுக் கூர்மைக்கு)

15 புள்ளி 15 வரிசை



15 புள்ளி 15 வரிசை

## ஆஞ்சநேயர் கோலம்



ஸ்ரீராம்

ஜய ராம்

ஜய ஜய ராம்

இது அனுமனுக்கு உரிய கோலம். அனுமான் வாயுபுத்திரன். காரியத்தை வெற்றியடையச் செய்பவர். நம்முடைய பிரார்த்தனையைத் தீவிரமாக்கி இக்கோலத்தைப் போட்டு பூஜை செய்தால் வாயு வேகத்தில் நம் உண்மையான பிரார்த்தனை நிச்சயம் நிறைவேறும்.

ஒரு மணையில் இக்கோலத்தை கோல மாவினால் போட வேண்டும். ய — ∪ வடிவில் இருக்கும். இரு பக்கக் கோடுகள் அரிசி மாவினாலும், நடுவில் வரையும் கோடு மஞ்சள் பொடியினாலும் வரைதல் வேண்டும்.

வியாழக்கிழமை தோறும் இக்கோலம் போடுவது மிக விசேஷம். நினைத்த செயல் தடையின்றி நடந்து முடியும்.

புதன்



வெள்ளி



வியாழன்









# 4. ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமப் பாராயணக் கோலம்

ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமத்திலுள்ள ஒவ்வொரு திருநாமமும் மிகச் சக்தி வாய்ந்தது. இவைகளைச் சொல்வதாலும் எழுதுவதாலும் பல நன்மைகள் ஏற்படுகின்றன.

ஆயிரம் நாமங்களைப் பாராயணம் செய்யவோ எழுதவோ நேரமில்லாத பெண்மணிகள் கீழ்க்கண்ட சஹஸ்ர நாமக் கோலங்களைப் போடுவதன் மூலம் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமத்தை முழுவதும் பாராயணம் செய்த பலனை அடையலாம்.

இப்புத்தகத்தில் 'புடிகரணம்' என்ற முறையில் இந்தப் பாராயணக் கோலங்கள் வரையப்பட்டிருக்கின்றன.

ஆயிரம் நாமங்களை, ஏழு நாட்களுக்குப் பங்கிட்டு 143 நாமங்களாக, முதல் நாமமும், கடைசி நாமமும் இக்கோலங்களில் வரையப்பட்டுள்ளது. ஞாயிற்றுக்கிழமை தொடங்கி சனி வரை கோலங்களைப் போட வேண்டும். ஞாயிற்றுக்கிழமை கோலத்தைப் போட்டு முதல் நாமத்தை - ஓம் விச்வாய நம: - எழுதி பிறகு அதன் கீழ் 143-வது நாமத்தை - ஓம் சதுர்புஜாய நம: - எழுத வேண்டும். இதே மாதிரி அடுத்து வரும் நாட்களில் கோலங்களைப் போட்டு நாமங்களை எழுதினால் வீட்டில் அமைதியும் மகிழ்ச்சியும் என்றும் இருக்கும்.

நவக்கிரகத் தேவர்களின் வண்ணம் அறிந்து அந்தந்த நாட்களில் அந்த வர்ணப் பொடியினால் கோலம் இட்டால் நவக்கிரகங்களின் அருளையும் ஆசியையும் பெறலாம்.

# ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணக் கோலம்

## ஞாயிற்றுக் கிழமை




## திங்கள் கிழமை




## செவ்வாய்க் கிழமை




## புதன் கிழமை



## வியாழக் கிழமை




## வெள்ளிக் கிழமை




## சனிக் கிழமை



# கோதையர் இடும் கோலங்கள்

பாகம் - 2



# 5. காரணம் நிறைந்த காரியம் நிறைவேற கோலங்கள்

## விநாயகர் கோலம்




1. மஞ்சள்
2. நீலம்
3. சிவப்பு
4. பச்சை
5. மீடியம் கிரே
6. ஆரஞ்சு

## மிட்டாய் (மகிழ்ச்சி) கோலம்



3 புள்ளி 3 வரிசை

## விளக்கு (அல்லது) விடியல் கோலம்



5 புள்ளி 5 வரிசை



4 புள்ளி 4 வரிசை

## சதுரங்கம் (புதன் கிழமையில் போடுவது சிறப்பு)



5 புள்ளி 5 வரிசை

## வீட்டின் ஒற்றுமைக்கு



6 புள்ளி 6 வரிசை

## மாலை நேரக் கோலம்



5 புள்ளி 5 வரிசை

## உதயக் கோலம்



6 புள்ளி 6 வரிசை



5 புள்ளி 5 வரிசை



**செல்வம் பெறுகிட**

17 புள்ளி 17 வரிசை




**மனம் ஒரு நிலைப்பட**

(தியானத்திற்கு ஏற்ற கோலம்)

17 புள்ளி 17 வரிசை



**வெற்றி பெற**

**உதவும் கோலம்**

19 புள்ளி 19 வரிசை



**பிரிந்த உறவு**

**மீண்டும் சேர**

19 புள்ளி 19 வரிசை

# அறுவடைக்கால கோலம்

வடநாட்டில் கோதுமை பயிர் அறுவடை செய்ததும் இக்கோலத்தை வரைந்து அறுத்த கதிர்களை இக்கோலத்தின் மீது பரப்பி வைப்பார்கள். உணவு பஞ்சம் ஏற்படாமலும், உடல் ஆரோக்கியத்திற்கும் வேண்டி இதனைச் செய்வார்கள். கோதுமை தவிர எந்தப் பயிர் விளைந்து அறுவடை செய்தாலும் இக்கோலம் போடாது பயிரை பயன்படுத்த மாட்டார்கள்.



## கிணறு தோண்டும் முன் போடும் கோலம்



பூமியின் எந்தப் பகுதியிலும் கிணறு வெட்ட ஆரம்பிக்கும் முன்பு இந்தக் கோலத்தைப் போடுவது சிறப்பு. நீர் வளம் அறிந்து இக்கோலமிட்டு பூஜை செய்த பின்பு கிணறு தோண்டினால் ஊற்றுக் கண்கள் அடைபடாமல் நீர் என்றும் சுரந்து அமிர்தமாய் கங்கை பெருகி வருவாள். நீரின் தன்மை சுகம் தரும். வற்றாத நிலையில் மனம் குளிர கிணறு பொங்கி நிற்கும் என்பது நம்பிக்கை.



## மகிழ்ச்சியும் வளமும் அடையாளம் காட்டும் கோலம்

19 புள்ளி 19 வரிசை



## உதவி கோலம்

19 புள்ளி 19 வரிசை



6 புள்ளி 6 வரிசை

## வீட்டில் ஒற்றுமைக்கு



8 புள்ளி 8 வரிசை

# ௬. திருநாள் கோலங்கள்
# திருவிழாக் கோலங்கள்

## சித்திரை வருஷப் பிறப்பு

சித்திரை மாதத்தில் முத்திரை பதிக்கும் கோலம்.

ஆண்டின் முதல் மாதம் சித்திரை. அந்த மாதத்தின் முதல் நாள். அந்த ஆண்டு முழுவதும் நமக்கு நலன்கள் எல்லாம் பெருக வேண்டும் என்ற நம் ஆசையை நாம் இறைவனிடம் வேண்டும் நாள். அந்த முதல் நாள் எந்தக் குறையுமின்றி நிறைவாக இருந்திட வேண்டும். நலம் பல பெற வேண்டும் என்பதில் நாம் தீவிரமாய் இருப்போம்.

அன்று வாசலில் புதுக்கோலம் இடுவோம். இறைவனை வழிபட வைத்துள்ள பூஜையறையில், பசுமை மிகு காய்கறிகள் கனிந்த பழ வகைகள், முதலில் கண் விழித்ததும் நம்மையே நாம் பார்த்துக் கொள்ள முகம் பார்க்கும் கண்ணாடி, தங்கம், வெள்ளி நாணயங்கள், நகைகள், அரிசி, பருப்பு முதலிய தானிய வகைகள், மஞ்சள் வெற்றிலைப் பாக்கு, புதிய வேப்பம்பூ, புதிய பஞ்சாங்கம் இவைகளை வைத்துப் பூஜை செய்வோம். பின்னர் புது பஞ்சாங்கத்தைப் படிக்க வேண்டும். ஆண்டின் பலன்கள் முழுவதும் குறிப்பிடப்பட்டிருக்கும் பஞ்சாங்கத்தைப் படிப்பதும், அதனைப் பொருள் உணர்ந்து கவனத்துடன் கேட்பதும் மிகவும் நற்பலன்கள் அளிக்கக்கூடியது.



## சித்திரை வருஷப் பிறப்பு

சித்திரை மாதம் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் போற்றுதலுக்குரிய மாதமாகக் கொள்ளப்படுகிறது. அந்த மாதத்தில் கும்பகோணம் மட்டுமன்றி பல திவ்ய க்ஷேத்திரங்களில் பெருமாளை கருட வாகனத்தில் எழுந்தருளச் செய்து திருவீதி வலம் வருவார்கள். கருடனுக்கு உகந்த மாதமாக இம்மாதம் இருப்பதால் கருட பகவானின் உருவமோ அல்லது திருப் பெயரையோ கோலத்தில் எழுதி வழிபடுவது மிகவும் சிறப்பு.



வட இந்தியாவிலும் இம்மாதிரிக் கோலமிட்டுப் பூஜை செய்வதும் புதுப் பஞ்சாங்கம் படிப்பதும் வழக்கத்தில் இருந்து வருகிறது.

## சித்ரா பௌர்ணமி



சித்ரகுப்தன் என்று பெயரைக் கேட்டதும் எமதர்மனின் கணக்குப் பிள்ளை என்பது எல்லோருக்கும் தெரியும். நாம் செய்யும் பாப, புண்ணியங்களைக் கணக்கில் எழுதி வைப்பவர் என்று சொல்லப் படுவதுண்டு. இவருக்கு காஞ்சி புரத்தில் தனிக்கோவில் உண்டு. பல வர்ணங்களில் உள்ள சீட்டி துணி யும் (ஒரு வகைத் துணி), கறுப்பு எள்ளும் இவருக்கு அளித்துப் பூஜை செய்தால் நாக தோஷம் விலகும் என்றும் சொல்வது உண்டு. அதற்கான கோலம் இது. இக்கோலத்திற்கு ஒரு வாசல் மட்டுமே இருக்க வேண்டும்.

## அக்னி நட்சத்திரம்




சித்திரை மாதம் மூன்றாவது வாரத்தில் ஆரம்பித்து விடுகிறது அக்னி நட்சத்திரம். அன்றிலிருந்து கத்தரி வெய்யில் முடியும் வரை அக்னி நட்சத்திர நாட்கள் என்று கணக்கிடப்படுகிறது. அதிக உஷ்ணத்தினால் மனிதர்களுக்கு ஏற்படும் நோய்கள் தடுக்கப்படவும், உடல் ஆரோக்கியம் பெறவும், இறைவனை குளிர்ந்த நிலையில் வைப்பதற்கு இக்கோலம் துணை செய்யும்.

ஒரு வட்ட வடிவ பாத்திரத்தில் பூஜை அறையில் எப்போதும் சுத்தமான நீரை வைத்திருக்க வேண்டும். தினம் நீரை மாற்றுவது அவசியம். சிறு மண் சட்டியில் விரைவில் முளை வரக்கூடிய கேழ்வரகு, கொத்தமல்லி விதை, வெந்தயம் போன்றவற்றைப் பயிரிட்டு வைக்க வேண்டும். முளை கட்டிய பயிறு வகைகள் பச்சையாக நைவேத்தியம் செய்தல் சிறப்பு. பேரீச்சை பாலைவனத்தில் வளரும் மரம். அதன் இனிப்பான பழங்களை நைவேத்தியம் செய்து இறைவனின் கருணையை உணரலாம். கிராமப்புறங்களில் தயிர் சாதம், நீர் மோர் சாமிக்குப் படைக்கப்படுவதுண்டு.

## ஸ்ரீராம நவமி

மனிதனாகப் பிறந்து, வாழ்ந்து, மனிதப் பண்பாடுகளோடு வாழ்ந்து காட்டிய மகா விஷ்ணுவின் மகோன்னதமான அவதாரம் ஸ்ரீராமாவதாரம். நேர்மை, நிதானம் இவற்றோடு வாழ்ந்து காட்டிய பெருமான் ஸ்ரீராமன். தனது பரம பக்தரான ஆஞ்சனேய ஸ்வாமியை அடையாளமாக வைத்த பக்தியின் பெருமையை, அதன் சக்தியை உலகுக்கு நிலை நாட்டியவர். ஸ்ரீராமனது பிறந்த நாள் நவமி தினம்.




அன்று இடப்பட வேண்டிய சிறப்பான கோலம் இங்கே வரையப்பட்டுள்ளது. இந்த ஒரு நாள் மட்டுமன்றி, ஒவ்வொரு சனிக்கிழமையும் இந்தக் கோலத்தைப் போடலாம். கோலம் போட்டு 'ராம' என்ற பெயரை நான்கு பக்கங்களிலும் எழுத வேண்டும்.

ஸ்ரீராம நவமியன்று பாதம் கீழ் நோக்கி இருக்க வேண்டும். இதை முக்கியமாய் நினைவில் வைத்துப் போட வேண்டும்.

குழந்தையாகப் பிறந்து குறும்புத் தனங்கள் செய்து குழலூதிக் கோகுலத்தையும், குவலயத்தையும் மயக்கிய ஸ்ரீகிருஷ்ணனும் மகாவிஷ்ணுவின் மற்றொரு அவதாரம். அவர் பிறந்த நாளை கோகுலாஷ்டமி என்று கொண்டாடுகிறோம். அந்நாளில் இதே கோலத்தை பாதம் மேல் நோக்கி இருக்கும் விதத்தில், அதாவது வீட்டிற்குள் வருவது போன்ற அமைப்பில் வரைந்திட வேண்டும்.

## வைகாசி விசாகம்



### கந்த ஷஷ்டி கோலம்

### முருகப் பெருமானுக்கு உகந்த கோலம்

எல்லா மாதங்களிலும் விசாக நட்சத்திரம் போற்றுதலுக்கு உரிய ஒன்று. ஆனால், வைகாசி விசாகம் விரி பொருள் பல பெறும் நாளாகும். முருகன் தமிழ் கடவுள். அழகுக்கு மறுபெயர் முருகன். அன்னை சக்தியிடம் வேல் வாங்கிய பிள்ளை. தந்தைக்கு உபதேசம் செய்த ஞானப்பிள்ளை. நம் சொந்தப் பிள்ளையாகிய இந்த முருகப் பெருமானுக்கு உகந்த சிறப்பு நாட்களுள் ஒன்று வைகாசி விசாகம். அந்த நாளிலும், கந்தன் சூரபதுமனை வென்று வாகை சூடிய சஷ்டி நாளன்றும் இதனை சஷ்டிக் கோலமாக வரைந்து வணங்கினால், அவன் அருள் கூடும். அவனைப் பற்றிய நினைவு பெருகும். அதுவே பெருந்துணையாகும்.

நீள் சதுரம் முதலில் வரைய வேண்டும். நான்கு மூலைகளிலும் பிறை வடிவில் இரட்டை இழையாக கோடுகள் போட வேண்டும். இக்கோடுகள் சிவனை குறிப்பதாக அமையும். நீள் சதுரத்தின் நடுவில் அறுகோணம் இரண்டை இழைகளால் போட்டு நடு புள்ளி வைத்து அதைச் சுற்றி ஒரு சிறு வட்டம் வரைய வேண்டும்.

அறுகோணக் கோலத்தின் இருபுறமும் திருவேலினை வரைய வேண்டும். வேலின் முனை இருபுறமும் மாறி இருப்பதை நினைவில் கொண்டு கோலமிடுவது சிறப்பு. கேட்டு பெறும் பலன்களைவிட இறைவனே ஊட்டிக் கொடுக்கும் பலன்கள்தான் நிறைவானவை, நிச்சயமானவை, நித்தியமானவை. இவ்வகைச் சிந்தையிலேயே நாம் கோலத்தைச் சித்தரித்து வந்தால் அதில் முழுமையான தெய்வாம்சம் விளங்கும்.

விசாகம் நட்சத்திரம் கூடிய பௌர்ணமி தினத்தில் ஆலயங்களில் லட்ச தீபங்களை ஏற்றுவதுண்டு. வாழ்க்கையில் இருள் விலகி ஒளி பெறச் செய்யும் நாட்கள் இவை. அதனால் விளக்குகளை வரைந்து அதில் குத்து விளக்குகள் ஏற்றி வைக்கலாம்.

# தீபாவளிக் கோலங்கள்

நாம் துன்பம் அனுபவிக்கும் காலத்திலும் உலகத்தில் வாழும் மற்றவர்கள் நலமாக, சந்தோஷமாக இருக்க வேண்டும் என நினைக்கும் ஒரு தாயின் வரமாக அமைந்து கொண்டாடப்படுவதுதான் தீபாவளிப் பண்டிகை. வடநாட்டில் தீபாவளியை புது வருஷப் பிறப்பாகக் கொண்டாடுவார்கள். அவர்களுக்கு இந்நாள் லக்ஷ்மி தேவியை வணங்கி பூஜிக்கும் நாளாகும். மனம் விளக்கிக்கொள்ள புறத்தில் ஏற்றப்படும் விளக்கான சூரியனுடைய பாதை அன்று துலா ராசியில் நுழைகிறது. அதனால் வட இந்தியர் தீபங்கள் ஏற்றி தீபாவளியைக் கொண்டாடும் போது பலவித கோலங்களை ஒவ்வொரு நாளும் சிறப்பாக வரைந்து பூஜைகள் செய்கிறார்கள்.

பல விளக்கு ஏற்றி வைப்பதற்கு ஏற்றார்போல பெண்கள் கோலம் போடுவார்கள். இக்கோலம் ரங்கோலி எனப்படும். சிகப்பு, மஞ்சள், பச்சை, நீலம் என்று பலவகை கலர் பொடிகளைக் கொண்டு கோலமிட்டு அதில் விளக்கு ஏற்றுவார்கள். மனத்தில் மிகுந்த மகிழ்ச்சியை ஏற்படுத்தும்.

## தீபாவளிக்கு முன் தினம்



தீபாவளிக்கு முதல் நாள் இரவு பூஜை அறையில் இக்கோலம் வரையப்படும். அதன்மீது மணை போடுவார்கள். பின்னர் அதில் குடும்பத்தாருடைய புத்தாடைகள், பல்வேறு பட்டாசுகள், பலகார வகைகள் வைக்கப்படும்.

தீபாவளி கோலம்





தீபாவளி நாளில்

## தீபாவளி நாளில்



தமிழ்நாட்டில் காய்ச்சிய எண்ணெய், தீபாவளிக்காகச் சுவையாக கிண்டிய மருந்துக் கலவையான லேகியம் ஆகியவை இடம் பெறும்.

தீபாவளியன்று பூஜை அறையில் போட வேண்டிய கோலம் இது. இதை வர்ணப் பொடிகள் உபயோகித்தும் அழகு செய்யலாம். அரிசி மாவினால் வரைந்து சுலபமாக போட்டிடலாம். அடுத்துள்ள கோலமும் தீபாவளியன்று போடும் வழக்கம் உண்டு.

## தீபாவளியில் 5வது நாள் கோலம்

தீபாவளிப் பண்டிகையின் ஐந்தாவது நாள் பண்டிகை நிறைவாக கொண்டாடிய மகிழ்ச்சியை இறைவனிடமே சமர்ப்பிப்பதின் அடையாளமாய் போடுவது இக்கோலம். தியானம், தபஸ் என்பது எல்லோராலும் செய்ய முடியாது. அதனால்தான் பண்டிகை, அதற்குரிய கோலம், உணவுப் பழக்கம் என்ற கட்டுப்பாட்டின் மூலம் இறையுணர்வை நாம் பெறுகிறோம். இதற்கு முன்னோடிகள் நம்முடைய முன்னோர்கள்.

## தீபாவளியில் 5வது நாள் கோலம்





## லக்ஷ்மி தேவிக்கு ஆரத்தி கோலம்

இரண்டு அன்னப் பறவைகளுடன் கூடிய இக்கோலத்தை ஒரு பித்தளைத் தட்டில் வரைந்து லக்ஷ்மி தேவிக்கு மங்கள ஆரத்தி செய்வார்கள்.

நம் நாட்டில் வைகுண்ட ஏகாதசி அன்று பரமபதம் என்ற விளையாட்டு விளையாடுவோம். இரவில் கண் விழித்து இருப்போம். அதுபோல வடநாட்டில் பகடைக்காய் விளை யாட்டு விளையாடப்படு கிறது. இந்த விளையாட்டு சின்னத்தை தீபாவளிக்கு இரண்டாம் நாள் வரைகிறார் கள். மகிழ்ச்சி, ஆரோக்கியம் வேண்டி எல்லோரும் ஏலம், குங்குமப்பூ, இனிப்பு கலந்து வெற் றிலைப்பாக்கு போட்டுக் கொள் கிறார்கள். தாம்பூலம் போட்டுக் கொள்ளும் விசேஷ நாளாக இது கடைபிடிக்கப்படுகிறது.



## வைகுண்ட சதுர்த்தி

தீபாவளிக்குப் பிறகு வரும் வைகுண்ட சதுர்த்தி என்று வரும் பண்டிகை தினத்தில் இந்தக் கோலத்தைப் போட்டு சிவ வழிபாடு செய்வார்கள்.



## லக்ஷ்மி பூஜை கோலம்

இந்தக் கோலம் தீபாவளியை அடுத்து வரும் லக்ஷ்மி பூஜை செய்யும் நேரத்தில் சிறப்பாகப் போடுவார்கள்.



## கார்த்திகை தீபம்

முற்காலத்தில் மக்கள் கதிரவன், நிலவு, நெருப்பு மூன்றையும் வழிபட்டு வந்திருக்கிறார்கள். நெருப்பு வழிபாட்டு ஸ்தலமாக திருவண்ணாமலை விளங்குகிறது. கார்த்திகை மாதத்தில் தீப வழிபாடு சிறப்பாக நடைபெறும். ஒளி கிடைத்தால் இருள் விலகும் என்பது திருவாக்கு. ஆலயங்களில் விளக்கீட்டு விழா நடைபெறும். கார்த்திகை தீபத் திருநாளில் இக்கோலத்தை இரட்டை இழையுடன் வரைந்து விளக்குகள் பல ஏற்றி வழிபட வேண்டும். வீடுகளிலும் அன்று மாலை வரிசையாக விளக்குகள் ஏற்றி அகமும், புறமும் ஒளி பெறச் செய்திடுவோம். அதனால் வீட்டில் கல்வி ஒளியும் செல்வ ஒளியும், ஞான ஒளியும் ஏற்படும். மண் விளக்கு (அகல் விளக்கு), சங்கு விளக்கு, கிளிஞ்சல், வெண்கலம், வெள்ளி முதலியவற்றில் விளக்கு ஏற்றலாம், நல்லது.



## திருவாதிரை நாள்



மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரம் சிவபெருமானுக்கு உகந்த நாள். அன்று காலை இக்கோலத்தைப் போட்டு வில்வம், மந்தாரை மலர் கொண்டு பூஜை செய்திட வேண்டும். வெல்லமிட்ட களியும், ஏழு அல்லது ஒன்பது வகை காய்கறிகளை சேர்த்து உப்பு, புளி, காரம் கலந்த கூட்டும் நைவேத்தியம் செய்வர்.

சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்போடு

உறக்காண்பர் ஐந்தெழுத்தினுள் - என்ற திருக்குறள் கூறுகிறது. உருவத்திற்கும், அருவத்திற்கும் இடையே உள்ள வடிவம் லிங்கம். நெருப்பு மேல் நோக்கி எழும். அதை விளக்கும் தத்துவமே சிவலிங்கம்.

## பொங்கல்

மார்கழி மாதத்தின் கடைசி நாள் போகிப் பண்டிகை கொண்டாடப்படுகிறது. 'போகி' என்பது இந்திரனை குறிப்பது. அந்நாளில் இந்திர விழாவாக இருந்து பிந்நாளில் வீட்டு விழாவாக போகிப் பண்டிகை மாறிவிட்டது. பழைய சாமான்களை எறிந்துவிட்டு வீடு, தரை, சுவர் பகுதிகளைப் புதுப்பிக்கப்படுகிறது. பழமையை எரித்து விட்டு புத்துணர்ச்சியுடன் பெருவாழ்வுக்கு அடையாளமாய் போகி நாளன்று இவ்வகை கோலங்கள் போடப்படுகின்றன.

அறுவடைக்குப் பிறகு விழா கொண்டாடுவது உலகம் முழுவதும் நடைபெறும் பண்டிகையாகும். சூரியன், பிள்ளையார், அக்னி, இந்திரன், தீபம் அனைத்திற்கு ஆராதனை செய்வது இந்நாளாகும்.

பொங்கல் தமிழர்களுக்குச் சிறப்பு மிக்கதொரு திருநாள். சூரியனது திசை மாற்றத்தையும், வடக்கு நோக்கி சூரியனுடைய தேர் நகரும் உயரிய உத்தராயன புண்ணிய காலம். அன்று வெட்ட வெளியில் சூரிய ஒளிபடும் இடத்தில் இக்கோலங்களில் ஒன்றினை வரைந்து பூஜை செய்து பொங்கலிடுவது நமது வழக்கம். மாட்டுத் தொழுவத்திலிருந்து முன் வாசல் வரை பலவித கோலங்கள் போடுவது பொங்கல் பண்டிகையில் ஒரு சிறப்பு. மார்கழி முப்பது நாளும் தினமும் அதிகாலையில் வாசலில் அழகுக் கோலமிட்டு, பரங்கிப்பூ வைப்பது வீதிக்கே அழகூட்டும்.

போகிப் பண்டிகை





பொங்கல் கோலம்

## பொங்கல் கோலம்



தையொரு திங்களும் தரை விளக்கி
தண் மண்டலமிட்டு முன்னாள்
ஐயநுண் மணற் கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித்தனள்

என்று ஸ்ரீ ஆண்டாளைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. தெலுங்கி 'மொக்கு' என்றும், கன்னடத்தில் 'ரங்கவல்லி' என்றும், இந்தியில் 'ரங்கோலி' என்றும் கோலம் சொல்லப்படுகிறது.

போகிப் பண்டிகை அன்று மாவிலை தோரண அமைப்பில் சதுர வடிவில் கோலம் சிறப்பான ஒன்றாகும். நடுவிலுள்ள வட்டங்கள் பலருடைய நல் எண்ணங்கள் சீராகி ஒன்றுகூட வேண்டும் என்பதைக் குறிக்கும்.

கிழக்கு திசைக்கு அதிபதி இந்திரன் என்பதால் இரண்டாவதாக உள்ள கோலத்தை திக் பாலரான இந்திரனுக்காக வரைவது சிலரது வழக்கம். வண்ணப் பொடிகளினால் கோலமிடுவது மேலும் அழகைக் கூட்டும்.

'காக்கா பிடி வைத்தேன், கன்றுபிடி வைத்தேன் உடன்பிறந்தவள் நெடுநாள் வாழ்க' என்று சகோதரிகள் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். பூஜையறையில் இக்கோலமிட்டு விளக்கேற்றி மகிழ்வார்கள். அன்றைய விருந்தில் ரசம் செய்து சாப்பிட மாட்டார்கள். இது காக்கை வடிவில் வந்த எமதர்மராஜனுக்கு செய்யும் பூஜையாக கிராமப் பகுதிகளில் சொல்லப்படுகிறது.

**காணும் பொங்கல்**



**இந்திரனுக்கோர் கோலம்**



## ரக்ஷாபந்தன் கோலம்



வடநாட்டில் ரக்ஷா பந்தன் என்பது சகோதர பாசத்தைச் சொல்கிறது. அன்றைய தினம் போடும் கோலம் பாசச் சங்கிலியாகும். தமிழகத்தில் தைப் பொங்கலுக்கு மறுநாள் 'காணும் பொங்கல்' என்றும் 'கணுநாள்' என்றும் சொல்கிறோம்.

## சிவராத்திரி

ஆனந்த நீராட்டலே அம்மையப்பனாகிய சிவபெருமானுக்கு உகந்தது. பிரியமானது மூன்று தளமுள்ள வில்வம். சிவபெருமானை மனதில் இருத்தி பூஜை செய்ய மிகவும் உகந்த நாள் சிவராத்திரி. விஷ்ணுவும், பிரம்மாவும் பெம்மானை பூசித்த இரவு சிவராத்திரி. அன்று வில்வ தளக் கோலம் இடுவது மிகவும் நன்று. அதன் அமைப்பு:

நெளிக் கோடுகள் இரண்டு வரிசை சதுர வடிவில் முதலில் வரைந்துவிட வேண்டும். மூன்று தளங்கள் உள்ள அமைப்பில் எல்லா திசைகளிலும் வில்வ இலை வடிவம் வரைந்து நடுவில் லிங்கம் வரைய வேண்டும். தனியாக ஆவுடையார் வரைய வேண்டாம். நான்கு பக்கங்களிலும் 'ஓம்' என்று தமிழிலோ ॐ என்று வடமொழியிலோ எழுத வேண்டும்.

சிவ பஞ்சாக்ஷரி ஜபம் தெரிந்தவர்கள் சிவராத்திரி அன்று இக்கோலத்தைப் போட்டு ஜபிக்கலாம். மந்திர உபதேசம் இல்லாதவர்கள் 'சிவ சிவ' என்று மனதுக்குள் ஜபிக்கலாம். இதில் மூன்று இலைகளுடன் கூடிய வில்வம் வரையப்பட்டுள்ளது. ஒன்பதாவது வில்வமாக நம் மனத்தை இறைவனிடம் ஈடுபட்டு அர்ப்பணிக்க வேண்டும்.

## சிவராத்திரி கோலம்



## மாசி பௌர்ணமி

வருடத்தில் பதினோராவது மாதமாக வருவது மாசி. இந்த மாதத்தில் மாசி மக நட்சத்திரம் கூடிய நாள் விசேஷமானது. ஒவ்வொரு மாசி மாதத்திலும் வரும் பௌர்ணமி நாளில் இந்தக் கோலமிட்டு பலனை அடையலாம்.

*1.* ஒரு ரிஷபம் வரைந்து அதன் மேல் லிங்கம் அமையுமாறு கோலமிட வேண்டும்.

*2.* இன்னொன்று பன்னிரண்டு இதழ்களுடன் குடம் போன்றும் வரைந்து வண்ணப் பொடிகளால் கோலமிட வேண்டும். பௌர்ணமிக்கு இவ்விதக் கோலம் மிகவும் சிறப்புடையது. நீலம், மஞ்சள், வெளிர் மஞ்சள் ஆகிய வண்ணங்களை உபயோகித்து கலசத்திலிருந்து வரும் இதழ்களைப் போடவேண்டும். பன்னிரண்டாண்டுகட்கு ஒருமுறை வரும் மகாமகமும் சிவபெருமான் அமுதக்குடம் உடைத்து வையத்துக்கு அருள் பெருக்கிய நந்நாள்.

## பௌர்ணமி கோலம்



## கிரகண கால கோலம்

கிரகண காலத்தில் சூரியனோ, சந்திரனோ முழு நிழலில் மூடப்பட்டு விடும்போது உலகில் பலவித தொல்லைகள், விஞ்ஞான விளைவுகள் ஏற்பட அது காரணமாகி விடுகிறது. அந்த நேரத்தில் உண்ணா நோன்பிருந்து இறைவனை மனத்தில் இருத்தி துதிப்பது வழக்கம். அந்த நாட்களின் தீய விளைவிலிருந்து பாதுகாப்பாய் இருக்க இடும் கோலம் இது.



சூரிய சந்திர உருவம் வரைய வேண்டும். எட்டுத் திசைகளையும் குறிக்க இடது பக்கம் நான்கு கோடுகள் வலது புறம் மூன்று கோடுகள் நடுவில் கீழ்புறம் ஒரு கோடு வரைய வேண்டும். நீண்ட வட்டத்தில் முகம், கண், மூக்கு, வாய் என்று முழுமையாகப் போடப்பட வேண்டும். வலதுபுறம் பிறை சந்திரன் இடவேண்டும். இந்த உருவத்தின் மேலும் கீழும் இரட்டை இழைகளால் நெளிக்கோடுகள் போடுவது அவசியம். இது சதுர வடிவில் அமையக்கூடாது.

பூரண கிரகணம் தோன்றும் காலத்தில் ஜபம், தியானம் செய்யும் போது இந்தக் கோலம் வரைந்தால் மனதில் அமைதி ஏற்படும். பெரிய வீடுகளில் முற்றம் தூண்கள் வைத்து அந்தக் காலத்தில் கட்டியிருப்பார்கள். இப்போதும் அதுபோல சில இடங்கள் உள்ளன.

## காரடையான் நோன்பு

### ஸ்ரீ காமாட்சி நோன்பு

காரடையான் நோன்பு, சாவித்திரி நோன்பு, ஸ்ரீகாமாட்சி நோன்பு என்று பலவிதமாய் சொல்லப்பட்டாலும் நோன்பு என்பது பெண்களின் மாங்கல்ய நலம் வேண்டி செய்யப்படுவதே. தன் கணவனின் ஆயுள் நீடிக்க மாசி மாதம் முடிந்து பங்குனி மாதம் தொடங்கும். முதல் நாள் இரவு நோன்பிருந்து அரிசி மாவும், வெல்லமும் கலந்து அடை கள், கொழுக் கட்டைகளை செய்து இறை வனுக்குப் படைக்கப்படும். ‘உருகாத வெண்ணையும், ஓரடையும் நான் வைத்து நோன்பு நூற்றேன். எக்காலும் என் கணவன் என்னைப் பிரியா திருக்க வேண்டும்’ என்று பிரார்த்தனை செய்து பூவை இணைத்த மெல்லிய மஞ்சள் சரடு (நூல்) கழுத்தில் கட்டிக்கொள்வர். இது பாரதப் பெண்களின் உயிர் துடிப்பாகும்.



## ஆவணி மாதம் போடப்படும் கோலங்கள்

ஆவணி மாதத்தில் (சிராவண மாதம்) இந்தக் கோலங்களை தினம் ஒவ்வொரு கோலமாக திங்கட்கிழமை தொடங்கி ஞாயிற்றுக் கிழமை வரை போடலாம். இந்தக் கோலத்தில் சந்திரன், சூரியன் மற்றும் எல்லா தேவதைகளுக்கும் உரிய சின்னங்கள் இருப்பது விசேஷமாகும். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு தேவ தேவியரையும் கொண்டாடும் விதத்தில் அமையப் பெற்றுள்ளது இக்கோலம்.

**திங்கள்**







**செவ்வாய்**







# நவராத்திரி

## லக்ஷ்மி கோலம்

நவராத்திரி சக்தி பூஜைக்குரிய விசேஷ நாட்களாகும். ஒன்பது நாட்களில் இந்தப் பூஜை தொடர்ந்து செய்யப்படுகிறது. முதல் மூன்று நாட்கள் ஸ்ரீதுர்க்கா தேவி பூஜை. அடுத்து வரும் மூன்று நாட்கள் ஸ்ரீலக்ஷ்மி தேவி பூஜை. அதனையடுத்து மூன்று நாட்கள் ஸ்ரீசரஸ்வதி தேவி பூஜை செய்யப்படுகிறது. நவராத்திரி நாட்களில் சிறு பெண் குழந்தைகளை தேவிகளாக பாவித்து அவர்களுக்கு சந்தோஷமாய் பூஜை செய்து உணவளித்து மகிழ்வது நம் வழக்கம். அதன்பின் விஜயதசமி தினம் கொண்டாடப்படும். பத்து நாட்கள் கொண்டாடப்படும் இப்பண்டிகை 'தசரா' என்றும் சொல்லப்படுகிறது.



நன்மை, தீமை எதையும் தாங்கிக் கொள்ளும் சக்தி நமக்குள் ஏற்பட வேண்டும். அதற்காகவே சக்தியான வளை மூன்று பெயர்களுடன் இந்நாளில் போற்றி வணங்குகிறோம்.

நவராத்திரி நாட்களில் நவதான்யங்களில் சுண்டல் இனிப்பு வகைகள் செய்து வெற்றிலை, பாக்கு, மஞ்சளுடன் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் ஒருவருக்கொருவர் வழங்குவதுண்டு.

எவ்வளவு பெரிய துக்கம், துயரம், துன்பம் ஏற்பட்டாலும் அதைத் தடுத்து நல்ல வழிகாட்ட ஸ்ரீதுர்க்கா பூஜை உதவும். ஒரு நாட்டின் கோட்டைக்குப் பாதுகாப்பாய் இருப்பது அகழி (துர்க்கம்), அதுபோல இயற்கையின் விபத்துக்கள், உடல் தொல்லைகள், மனத் தொல்லைகள் அனைத்தையும் ஒட்டி நம்மை விடுவிப்பவள் துர்க்கா தேவி. துன்பங்களைப் போக்குவதில் வேகமாய் வரும் தேவி (வீர வடிவம்) துர்க்கா. வன்னி மரத்தை துர்க்கையின் உருவம் என்று வேதங்கள் சொல்கின்றன. பாவத்தையும் பகையையும் அழிக்கக் கூடியவள் துர்க்கை.

## துர்கா தேவி

துர்க்கையைப் பூஜைக்கும் நாட்களில் இக்கோலம் போடுவது சிறப்பு. தட்டிலும் இதைப் போட்டு வைக்கலாம். ஐந்து தாமரைப் பூக்கள் குங்குமத்தால் வரைந்திட வேண்டும். துர்க்கைக்குரிய நிறம் சிவப்பு. அதனால் அன்னை மகிழ்ச்சியுறுவாள்.



நவராத்திரியில் லக்ஷ்மி பூஜைக்குரிய நாட்களில் இக்கோலங்களைப் போட்டு மனம் மகிழலாம். அளப்பரியாச் செல்வம் இருந்தால் அரியச் செயல்கள் பல செய்திட லாம். இருள் விலக்கி பல குடும்பங்களில் ஒளி காணச் செய்யலாம். அதற்கு திரு மகளின் அருளும், அதிர்ஷ்டமும் தேவை.

இந்த ஸ்வஸ்திக் சின்னங்கள் யாவுமே ஸ்ரீலக்ஷ்மி தேவியின் வடிவானவை. ஆரோக்யம், ஆயுள், மக்கட்பேறு, தைரியம், தான்யம் ஆகிய செல்வங்களின் அடையாளமும் இதுவே. இவைகளை எல்லா நாட்களிலும் பூஜை அறையில் போடலாம். சக்தி மிகுந்த நாட்களான செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் போடுவதுடன் சிறப்பாக பூஜை செய்யும் நாட்களிலும் போட்டால் மிகவும் பலன் உண்டு. லக்ஷ்மி தேவியின் கருணை நோக்கு நம்மீது விழும்.

லக்ஷ்மி தேவி ஐந்து இடங்களில் வசிப்பதாக முன்னோர்கள் சொல்லி இருக்கிறார்கள். அந்த இடங்களாவன:

1. பசுவின் பின் பாகம். 2. யானையின் முன் நெற்றி (அஸ்தகம்), அதனால்தான் பெரியோர்கள் அரசர்கள் வரும்போது வரவேற்க ஆண் யானையின் மஸ்தகத்தில் பூரண கும்பத்தை வைத்து எடுத்து வருவார்கள். 3. சுமங்கலிப் பெண்களின் சீமந்தம் (வகிடு) அதனால்தான் பெண்கள் மங்கல குங்குமத்தை அங்கு வைத்துக் கொள்வர். 4. தாமரை மலர். இப்பூவைக் கொண்டு பூஜை செய்யும் போது பூவின் உள்பக்கமாக (கவிழ்ந்த நிலையில்) திருப்பி வைத்து செய்ய வேண்டும். ஸ்ரீமகாலக்ஷ்மியின் மென்பாதங்கள் தாங்கி நிற்கும் பேறு பெற்ற மலர் அது. 5. சிவபெருமானுக்கு உகந்ததாக போற்றப்படும் வில்வம். இதில் லக்ஷ்மி தேவி அமிர்த தாரையாக வசிக்கிறாள். அதனால் வில்வத்தை தளப் பக்கமாகக் கொண்டு பூஜிக்க வேண்டும்.

## லக்ஷ்மி தேவி கோலங்கள்





## நவராத்திரி லக்ஷ்மி கோலம்

நவராத்திரியில் லக்ஷ்மி கோலம் போட்டு இதிலுள்ள ஐந்து தாமரை பூக்களை மஞ்சள் பொடியால் போடுதல் சிறப்பைத் தரும்.



# சரஸ்வதி பூஜைக்குரிய கோலம்



சரஸ் என்றால் ஒளி என்று பொருள். கல்வி கற்பதற்கு மட்டுமன்றி நெசவு, உழவு, ஆயுத தொழில் அனைத்திற்குமே சரஸ்வதி தேவியின் அருள் வேண்டும். நவராத்திரியில் சரஸ்வதி தேவி பூஜை செய்யும் நாட்களில் போடும் கோலங்கள் இவை.

சரஸ்வதி பூஜைக்குரிய கோலம் போட்டு அதன் கீழே ஐந்து தாமரைப் பூக்களை அரிசி மாவினால் போட்டு அன்னையை வணங்கிட வேண்டும்.

## சரஸ்வதி கோலம்

(நினைவாற்றல்)



## வாசலில் போடவேண்டிய நவராத்திரி கோலம்



பூக்கள், பறவைகள், இலைகள் இவற்றின் பல கோணக் கூட்டமைப்பே இந்தக் கோலம். காணக் கண் கொள்ளாக் காட்சியாக அமைந்தது இது. இதனை நவராத்திரி நாட்களில் வீட்டின் முன்பு வண்ணப் பொடிகளால் போட்டு அழகு செய்யலாம். மனத்திற்கு உற்சாகம், மகிழ்ச்சி ஊட்டும் கோலம்.

## சுக்ல சஷ்டி

### (நாகபஞ்சமி)



நாகதோஷம் காரணமாக சில பெண்களுக்கு மக்கட் பேரின்றி இருக்கும். சந்தான பாக்யம் பெற வேண்டி நாக பஞ்சமி விரதமிருந்து நாக ராஜனுக்கு பூஜை செய்வார்கள். பாம்பு குடியிருக்கும் புற்றில் பால் முட்டை வைத்து பிரார்த் தனை செய்து கொள்வார்கள். அச்சமயம் இக்கோலம் போட்டுப் பூஜை செய்யலாம். நாக தோஷம் இல்லாதவர்களும் நாகபஞ்சமி அன்று பூஜை செய்யலாம். இதை பெண்கள் மிகவும் விரும்பி செய்வார்கள். நாகபஞ்சமிக்கு கோலமிடும் போது ஒரு தலையுடன் கூடிய பாம்பு, இரண்டு பாம்புகள் இணைந்திருக்கும் கோலம். தனித்தனியாக ஒற்றை எண் வரிசையில் பாம்புகள் வரைந்து பூஜை செய்யலாம். அதிகச் சிக்கலோடு கூடிய அதிக எண்ணிக்கையில் பாம்புகள் வரைந்து பூஜை செய்வது கிடையாது. அழகுக்காகவும், கலைநுணுக்க வெளிப்பாட்டிற்குமாகத் தான் மரத்தில் ஐந்து தலை நாகம், பாம்புகள் பின்னிக் கொண்டிருப்பது போல செதுக்குவார்கள். அரிசி மாவினால் பாம்பு வரைந்து இரு நாக்குகளை, கண்களை, குங்குமத்தால் வரைவதுண்டு.

## வசந்த கோலம்

வசந்த காலத்தில் செடி கொடிகள், மரங்கள் பசுமை தாங்கி இயற்கை அன்னைக்கு அணிகலன்களாய் எழில்பெறச்செய்யும். அதைக் கொண்டாடும் விதமாய் நாமும் அழகிய மலர் வடிவக் கோலங்கள் போடலாம். வண்ணப் பொடிகளினாலும், வாசனை மிகுந்த பூக்களினாலும் இக்கோலம் போடலாம். வீட்டு வாசலிலும் இவ்வகைக் கோலங்களை பலரும் அமைப்பர். பூஜை அறையிலும் போடலாம். கேரள நாட்டில் ஓணம் பண்டிகையில் மலரினால் (அத்தாப்பூ) கோலம் அமைப்பதை என்றும் சிறப்பாகச் செய்வார்கள்.

## 7. மங்கல நாட்களுக்குரிய மனமகிழ்க் கோலங்கள்



**மணக் கோலம்**

13 புள்ளி 13 வரிசை



**வீட்டில் மகிழ்ச்சிக்கு அடையாளம்**

10 புள்ளி 10 வரிசை



10 புள்ளி 10 வரிசை



10 புள்ளி 10 வரிசை

## மணமக்களுக்கு ஆரத்தி

புதுமணத் தம்பதிகள் தங்கள் இல்வாழ்க்கைப் பற்றி இனிய நினைவுகளோடு சந்தோஷம் மிகுந்தவர்களாய் இருப் பார்கள். மணமேடையில் சாஸ்திர முறைப்படி கோலம் இடுவார்கள். பின்னர் மணமக்களின் பிறந்த வீட்டிலும், புகுந்த வீட்டிலும் முதலில் அழைத்து வரும்போது அவர்களை மணக்கோலம் போட்டு ஜோடியாக அமரச் செய்வார்கள். வடநாட்டில் அவர்கள் உட்காருமுன் தரையில் நான்கு அன்னங்களை வரைந்து சுற்றி அழகுக் கோலம் இடுவார்கள். பின்னர் ஆரத்தி எடுப்பார்கள். ஆணும் பெண்ணும் இணையும் குடும்ப வாழ்க்கை சீர் பெற வேண்டும். பதினாறு வகைச் செல்வங்களையும் பெற்றுப் பெருமையோடு வாழவேண்டும். இந்த உயர்ந்த கருத்தில் வரையும் கோலம் இது.



## விருந்தினர் கோலம்

வட்ட வடிவம் ஒரு முழுமையான உணர்வை தெரிவிக்கும். நமது கோலங்கள் ஒவ்வொன்றும் செயல், புனிதம், அழகு மூன்றையும் வெளிப்படுத்துகிறது.



நம் நாட்டில் வட்டக் கோலமிட்டு நுனியுடன் கூடிய வாழை இலை போட்டு பரிமாறுவது சில குடும்பங்களில் உண்டு. வடநாட்டிலும் அவரவர் கற்பனையுடன் கூடிய இந்தப் பழக்கம் உண்டு. வட்ட வடிவக் கோலங்கள் வரைந்து அதன் மேல் சாப்பிடும் தட்டு அல்லது இலை வைத்து இனிப்பு வகைகளுடன் உணவு வகைகளை அளித்து உண்ணச் செய்வார்கள். ஆரோக்கியம், மகிழ்ச்சி இரண்டினைத் தரும் கோலம் இது.





## ஐந்து முகக் கோலம்

வீட்டின் முற்றத்தின் நடுவிலும், பூஜை அறையிலும் இப்பெரிய கோலத்தைப் போடுவது நல்லது. இதை ஐந்து முகக் கோலம் என்று சொல்வார்கள். ஐந்து கோலங்கள் இணைந் திருப்பது பார்த்தாலே விளங்கும். வீட்டிலுள் ளோர் மன ஒற்றுமையை விளக்கும் சின்னம் இந்தக் கோலம்.

## தூண்களுக்கு சிறப்புக் கோலம்

வீட்டின் தூண் களைச் சுற்றி இக்கோலம் போடுவது சிறப்பு. விசேஷ நாட்கள், பூஜை செய்யும் நாட்களில் தூண்களைச் சுற்றி இக்கோலம் போடுவது அழகு தருவதுடன் பல நன்மைகளையும் செய் யும் வலிமை உள்ளது.



## பூஜா ஆசனக் கோலம்



இறைவனால் நமக்கு அறிவு வழங்கப்பட்டிருக்கிறது. அந்த அறிவைப் பெருக்கி புத்தி பலத்தைப் பெற்று பக்தியோடு நாம் வாழ வேண்டும். ஒன்று அல்லது இரண்டு கோலங்களில் ஒன்றை தரையில் வரையலாம். அதை கோலப் பொடியினால் அல்லது அரைத்த அரிசி மாவினால் இழைகளாய் இழுத்து வரைதல் வேண்டும். பின்பு இக்கோலத்தின் மீது மரப்பலகை அல்லது தர்பாசனம் போன்ற வற்றைப் போட்டு அதன்மீது அமர்ந்து பூஜை செய் வதுண்டு. அதனால் பூஜை செய்பவர்களுக்கும், அதனை காண்பவர் களுக்கும் துக்கம், பயம், தன்னலம் குறுகிய எண்ணங்கள் விலகிப்போகும். வட நாட்டின் இந்த வழக்கம் இன்றும் சிறப்பாக கடைபிடிக் கப்பட்டு வருகிறது.





## ஞான கமலம்

ஞான கமலம், தாமரைக் கோலம் இந்த இரண்டு வகை கோலங்களும் வீட்டிற்கும், வீட்டில் உள்ளவர்களுக்கும் மன நலம், உடல்நலம் தருவதாகும்.

செவ்வாய்க் கிழமைகளில் இதனைப் பூஜை அறையில் தெய்வத்தின் முன்பு போட்டால் அன்றைய தினம் ஒரு சுபதினமாக இருக்கும்.



# கோதையர் இடும் கோலங்கள்

பாகம் - 3



# 8. நினைவு போற்றும் கோலம்

## போலாரி அம்மன் கோலம்

'போலாரி' என்று சொல்லப்படும் இந்த பூஜையில் வரையப்படும் கோலம் இது. ஐந்து திலகம் போல் உள்ளது சுமங்கலிகளாய் வாழ்ந்து மறைந்து போனவர்களைக் குறிக்கும். இந்த மாதிரி சில குடும்பங்களில் ஐந்து, ஏழு, ஒன்பது என்று வரைந்து தலைவாழை இலையில் எல்லா வகை உணவுகளையும் வைத்துப் படையல் செய்வார்கள். தனியாக ஒரு திலகம் போல் வரைவது கன்னிப் பெண்களைக் குறிக்கும். இதுவும் இரண்டு, மூன்று வரைவது உண்டு. மஞ்சள் பூசி குங்குமம் இட்டு அழகுற இதனை வரைவார்கள். இரு பக்கங்களிலும் விசிறியை மறக்காமல் வரைந்திடுவார்கள். இதே வரிசை முறையில் வரைந்து பூஜை செய்து வீட்டுக்கு உரிய பெரியவர்களை அழைத்து உபசரித்து உணவளிப்பார்கள். உணவு உண்ட பின்பு மன நிறைவோடு அவர்கள் வாழ்த்தினால் வீட்டில் அந்த ஆண்டில் எல்லா செயல்களும் தடையின்றி நன்மையில் முடிந்து பலன் தரும் என்பது அசையா நம்பிக்கையாகும்.

'சுமங்கலி பிரார்த்தனை' என்பது ஒவ்வொரு இனத்தவர் ஒவ்வொரு மாதிரி செய்வர். ஆனால் மனதில் இருக்கும் பிரார்த்தனை ஒன்றே. செயல் முறையில் சில வேறுபாடுகள் இருக்கும், அவ்வளவே.

**போலாரி அம்மன் கோலம்**

**சுமங்கலிப் பிரார்த்தனை**
















சுப்ரமணிய சுவாமி — போல ரியம்மா (மாரியம்மன்) — ஸ்ரீ பெருமாள் — துளசியம்மன் — ஸ்வஸ்திகம் சூரிய சந்திரர்கள்

## ௯. பேறளிக்கும் பேரின்பமளிக்கும் கோலங்கள்



**உதவி பெறவும்**
**உதவி செய்யவும்**
**அடையாளக்**
**கோலம்**

12 புள்ளி 12 வரிசை



**சிறகு விரிக்கும்**
**சந்தோஷக் கோலம்**

12 புள்ளி 12 வரிசை



16 புள்ளி 16 வரிசை



**சிறகு விரிக்கும் சந்தோஷக் கோலம்**

16 புள்ளி 16 வரிசை



**சிறகு விரிக்கும்**

**சந்தோஷக் கோலம்**

17 புள்ளி 17 வரிசை



16 புள்ளி 16 வரிசை



9 புள்ளி 9 வரிசை



8 புள்ளி 8 வரிசை

**வம்சம் வளர**



7 புள்ளி 7 வரிசை



13 புள்ளி 13 வரிசை




**வம்சம் விளங்கிட**

13 புள்ளி 13 வரிசை

# 10. புள்ளி வரிசைக் கோலங்கள்



7 புள்ளி 7 வரிசை



7 புள்ளி 7 வரிசை

இடுக்குப் புள்ளி
11, 5, 7, 5, 3, 1





**துளசி மாடம்**
7 புள்ளி 8 வரிசை

## துளசி மாடம்

9 புள்ளி 10 வரிசை





9 புள்ளி 9 வரிசை



10 புள்ளி 10 வரிசை



10 புள்ளி 10 வரிசை



10 புள்ளி 10 வரிசை



11 புள்ளி 11 வரிசை



11 புள்ளி 11 வரிசை



11 புள்ளி 11 வரிசை



13 புள்ளி 13 வரிசை



13 புள்ளி 13 வரிசை



15 புள்ளி 15 வரிசை



16 புள்ளி 16 வரிசை



16 புள்ளி 16 வரிசை



16 புள்ளி 16 வரிசை



17 புள்ளி 17 வரிசை



15 புள்ளி 15 வரிசை



13 புள்ளி
10 வரிசை



18 புள்ளி 18 வரிசை



# 11. திருஷ்டிக் கோலம்

## திருஷ்டி கோலம்

உடம்பில் அடிபடுவதால் ஏற்படும் காயத்திற்கு மருந்துண்டு. ஆனால் கண்ணேறு படுவது மிகவும் கொடிய விளைவுகளை ஏற்படுத்தும். கண் திருஷ்டி படாதிருக்க இக்கோலத்தை வாசற்புறச் சுவற்றில் வரைந்து வைத்தால் தீய சக்திகள் ஓடி மறையும்.



## கணேச பூஜை

எவ்வித இடையூறுகளையும் இமைப்பொழுதில் தீர்த்து வைப்பவன் விநாயகப் பெருமான். அவனை வழிபடும் முறை ஒன்றாக இருந்தாலும் ஆந்திர நாட்டில் விநாயக சதுர்த்தியன்று இவ்விதம் கோலமிட்டு வணங்கி பூஜை செய்வார்கள்.




















"ஜீவதி கோம்பு - திருஷ்டி கோம்பி" - குழந்தை பிறந்த பின் ஐந்தாம் நாள் இந்தக் கோலம் போடப்பட்டு விருந்தாளிகள் வரும் முன்னர் அழித்து விடுகிறார்கள்.

(கர்நாடகா)




வீட்டின் முன்புறத்தில் வீட்டைப் புனிதமாக்கவும், தீய தேவதைகளை விரட்டவும் போடப்படும் கோலங்கள்.

(தென் நாட்டில்)





மாடுகள் போன்றவைகளுக்குக் (கால்நடை இனங்களுக்கு) 'கண் படிதலை' தடுக்கப் போடப்படும் (திருஷ்டி பாரி என்னும்) சூட்டின் வடிவம்.

(கர்நாடகா)





பாலி சக்ரவர்த்தியின் நினைவிற்காக கோட்டைகளில் போடப்பட்ட ஏழு உருண்டை வடிவம்.

'குமடி பாண்டு' எனும் இந்த வடிவம் புதிதாக கட்டப்பட்ட வீடுகளுக்கு திருஷ்டிப் பரிகாரமாக துர்தேவதைகளை துரத்த போடப்படும்.



'சிம்ம பரிசுவுதர்' எனும் சிங்க வடிவம் சொறி சிறங்கு வியாதிகள் நிவர்த்தியாக பொற் கொல்லர்களின் போட்ட வடிவம்.



கோவில் கதவுகளின் மீது திருஷ்டி படாமலிருக்க போடப்படும் வடிவம்.



மாட்டுப் பொங்கல் அன்று வீட்டு வாசலில் இடப்படும் குறி இரு பக்கமும் சாணத்தினால் வரையப்படும்; மந்தையிலிருந்து திரும்பி வரும் மாடுகளின் மீது ஏற்படும் திருஷ்டியை நீக்கி பால் வளத்தைக் கூட்டும்.

# துஷ்ட தேவதை விலக

ஏவல், பில்லி, சூன்யம் போன்றவை வெறும் ஏமாற்று என்றும் சொல்லிவிட முடியாது. கெட்ட தேவதைகளின் ஆதிக்கத்தினால் விளைவதுதான் இது.

கண் போன்ற அமைப்பைக் கொண்ட இக்கோலம் துஷ்ட தேவதைகளைத் துரத்திவிடும். முன் காலத்தில் கோட்டை கொத்தளங்களில் அவற்றில் மேற்கூரையில் கதவுகளில் இது சித்திரம் போல் வரையப்பட்டிருக்கும். வடநாட்டில் இந்த அமைப்பு சித்திரங்களை அதிகம் காணலாம்.





திருப்பாவை - 13



திருப்பாவை - 14





திருப்பாவை - 15



திருப்பாவை - 16



திருப்பாவை - 17



திருப்பாவை - 18





திருப்பாவை - 19



திருப்பாவை - 20

# கோல மொழிகள்

1. தினசரி அதிகாலையில் வாசல் பெருக்கிக் கோலமிடுவதால் வீட்டில் மகாலட்சுமி அங்கே குடியேறுகிறாள்.

2. சூரியன் உதிப்பதற்கு முன் வாசல் பெருக்க வேண்டும். உதித்த பிறகு பெருக்கினால் சூரியனின் அன்னைக்குப் பிடிக்காது.

3. சாணமில்லாமல் வெறும் தண்ணீர் தெளிக்கக்கூடாது. அல்லது சிறு மஞ்சள் தூளாவது நீரில் கலக்க வேண்டும்.

4. புதிய தண்ணீரைத் தெளிக்க வேண்டும்.

5. அரிசி மாவு கொண்டு கோலமிட வேண்டும். அதைத் தின்னும் காக்கை, எறும்பு போன்றவை அதனால் மகிழ்ந்து இறைவனைப் பிரார்த்திக்கும். அதனால் இல்லத்தில் வறுமை நீங்கும்.

6. ஆள்காட்டி விரலை நீக்கியே கோலமிட வேண்டும்.

7. இரட்டை இழைக் கோலங்கள் போடுவதுதான் சுபம். அசுப நிகழ்ச்சிக்குத்தான் மூன்று இழைக் கோலங்கள் போடப்படுகிறது.

8. தெற்குப் பார்த்து நின்று கோலம் போடக்கூடாது.

9. கோலத்தில் இடப்படும் கோடு தெற்குப் பக்கமாய் முடியக்கூடாது.

10. வெளியே செல்லும் கணவன் நலமாக வீடு திரும்பவும், கன்னியர்க்குத் திருமணம் நடைபெறவும், பிள்ளைப் பேறடையவும் இந்தக் கோலங்கள் மங்கலச் சின்னம்.

11. மணம் கொண்ட மணவாளன் திருப்பாதங்கள் பதிவதற்காகவே கோலம் போடப்படுகிறது.

12. கோலம் அழகாகவும், கவர்ச்சியாகவும் அமைவது நல்ல சகுனமாக போற்றப்படுகிறது.

# கீதாசாரம்



எது நடந்ததோ, அது நன்றாகவே நடந்தது.
எது நடக்கிறதோ, அது நன்றாகவே நடக்கிறது.
எது நடக்க இருக்கிறதோ,
அதுவும் நன்றாகவே நடக்கும்.
உன்னுடையதை எதை இழந்தாய்?
எதற்காக நீ அழுகிறாய்?
எதை நீ கொண்டு வந்தாய், அதை நீ இழப்பதற்கு?
எதை நீ படைத்திருந்தாய், அது வீணாவதற்கு?
எதை நீ எடுத்துக் கொண்டாயோ,
அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது.
எதை கொடுத்தாயோ,
அது இங்கேயே கொடுக்கப்பட்டது.
எது இன்று உன்னுடையதோ,
அது நாளை மற்றொருவருடையதாகிறது
மற்றொரு நாள், அது வேறொருவருடையதாகும்.



இதுவே உலக நியதியும்,
எனது படைப்பின் சாராம்சமுமாகும்

- பகவான் ஸ்ரீ கிருஷ்ணர்

